

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் யரு | ஈசுவர தை | மலர் ய |


## ஐயரும் பிள்ளையும்

திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் M. A.,
அண்ணாமலைநகர்.

இக்கட்டுரையில் "ஐயர்", "பிள்ளை" முதலான சில சொற்களின் வரலாறு ஆராயப்படும். உரியியலில் (சூத். 89) "ஐ வியப்பாகும்" என்றார் தொல்காப்பியர். பெருமை அல்லது தலைமை காரணமாக வியப்புத்தோன்றும் என்பது தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் "மருட்கைபற்றிய சூத்திரத்தால் (7) பெறப்படும். ஆகலின் வியப்பினை யுணர்த்திய "ஐ" எனுஞ்சொல் தலைமையையும் உணர்த்தும் ஆற்றல் பெறுவதாயிற்று. "என்னை முன் நில்லன்மின் தெவ்விர்" எனத் திருக்குறளிலும், "என்னை புற்கையுண்டும் பெருந்தோளன்னே" எனப் புறநானூற்றிலும் வருகின்ற இடங்களில் "ஐ" என்பது

தலைவன் என்னும் பொருட்டு. ஒரு குடும்பத்தின் தலைவன் தந்தையாக இருந்த காரணத்தால் தந்தையும் ஐயனெனப்பட்டனன். ஐயன் என்பதில் அன் என்பது ஆண்பால் உணர்த்தும் விகுதியென்பது நாம் அறிந்தது. எனவே இச்சொல்லில் தாது "ஐ" என்பதாகும். அத்தாதின் அடியாகவே "ஐயை" என்னும் பெண்பாற் சொல்லையும் "ஐயர்" என்னும் பலர்பாற் சொல்லையும் நாம் தமிழிற் காண்கிறோம். ஐயன் என்னும் சொல்லை வடமொழி "ஆர்ய" என்னும் சொல்லின் திரிபு என்பார் கூற்று அடாது. ஆரியச் சொல்லில் ஐ என்னும் பகுதியைக் காண்கின்றேமல்லேம். அச்சொல்லின் தாதுவாகக் கருதப்படுவது 'போ' அல்லது 'ஓடு' என்னும் பொருள்படும் "ரு" என்பதாகும். "யத்" என்பது அதன் சாரியை. எனவே "ரு+யத்" "ஆர்ய" ஆனதற்கு விதி பாணினீயத்திற்சொல்லப்பட்டுள்ளது. அங்ஙனமிருப்பவும் தாதுப் பொருளால் ஒவ்வாதிருக்கின்ற இச்சொல்லைத் தமிழின் மூலகாரணம் என்று சொல்லுதல் ஒலி ஒப்புமையால் மொழியிலக்கண முடிபுகாட்ட முற்படுவோரது அறிவு பழுது பட்டுள்ளமையைக் காட்டும்.

இனி இதற்குவேண்டிய சான்றுகளைத் தமிழ் இலக்கியத்திற்காண்போம். ஐயர் என்பது அந்தணரின் வேறாய சிலரைக் குறித்தது என்பதற்குச் சான்று:—(தொல்—கற்பு—5) "அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்...........ஐயர் பாங்கினும் அமரர்ச்சுட்டியும்" எனவருவது. ஈண்டு அந்தணரின் வேறாகவே ஐயர் எண்ணப்படுகின்றனர். மேலும் ஐயர் என்னும் சொல் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பார்ப்பனரல்லாத சிலருக்கு வழங்கப்பட்டிருத்தல் காண்கிறோம். குறிஞ்சிக்கலியில் "குறவர் மடமகளிர் தாம் பிழையார் கேள்வர்த் தொழுதெழலால்............ தம் ஐயரும் தாம் பிழையார் தாங்தொடுத்தகோல்" என்றும், சிலப்பதிகாரக் கானல்வரியில் "கடல்புக்கு உயிர்கொன்று வாழ்வர் நின்ஐயர்," ஓடும் திமில்கொண்டு உயிர்கொல்வர் நின்ஐயர்" என்றும், வேட்டுவவரியில் "இளமாஎயிற்றி இவைகாண் நின் ஐயர்," "முறுங்தேர் இளநகை காணாய் நின்னையர்," "கயமலர் உண் கண்ணாய் காணாய் நின்னையர்" என்றும் வருமிடங்களிலெல்

லாம் குறவரும், பரதவரும், வேட்டுவரும் முறை முறையே ஐயர் எனப்பட்டமை அறிக. ஈண்டெல்லாம் "ஐயர்" என்பது தலைமையுடையாரையே குறித்து நின்றதன்றி ஜாதிப்பிரிவை உணர்த்தவில்லை என்பது தேற்றம்.

இத்தலைமைப் பொருளே கொள்ளத்தக்கது என்பதன் உண்மை இறையனாரகப்பொருள் சூத்திரத்தில்வழங்கும் "ஐயர்" என்னும் சொல்லால் வலியுறுகிறது. "வெளிப்படை தானே விரிக்குங்காலைத் தந்தை தாயே தன்னையர் என்றாங்கு அன்னவ ரறியப் பண்பாகும்மே" (சூத்திரம்—26) என்னுமிடத்தில் ஐயர் என்பது தந்தையல்லாத தலைமையுடைய பிறரைச் சுட்டுதல் காண்க. அதன் கருத்து தலைவணுகிய தந்தைக்கு அடுத்துத் தலைமைபூணும் உரிமையுடைய தமையனுருக்கு இச்சொல் இங்கு வழங்கப்பட்டிருப்பதான் உணரப்படும். "தமையன்" என்பது தானும் தம் ஐயன் என்னும் சொற்களால்ஆகி, முன்பிறந்த தலைமையுடைய ஒருவரை யுணர்த்தியவாறு அறிக. கம்பர் "ஐயனும் அன்னையும் சொன்ன செய்பத் துணிந்தது தூயவே" எனக் கூறியவிடத்தில் ஐயன் என்பது தந்தையையே உணர்த்துதல் தேற்றம். இங்ஙனமே சீத்தலைச் சாத்தனாரும் மணிமேகலை மணிபல்லவத் தீவிலே தாழ்துயருற்றகாலைத் தந்தையை யுள்ளி "ஐயாவோ" என்று அழுதாள் என்று கூறுகிறார். (மணி-காதை-8—வரி-43.) இன்னும் சிலப்பதிகாரத்தில் ஐயன் என்னுஞ் சொல் பெருங்குடிவாணிக மரபில் தோன்றிய கோவலனுக்கும் வழங்கப்பட்டுளது. வையை என்ற பொய்க்குலக் கொடியை..................அனநடைமாதரும் ஐயனும் தொழுது" எனவருமிடத்தில் ஐயன் கோவலன் என்பது உணர்க. தலைமை என்னும் பொருளே ஐயன் என்னும் சொல்லின் பகுதிப் பொருள் என்பது இற்றைநாள் நாம்வழங்கும் கடிதத்தலைப் புகளில் உள்ள "ஐயர்" என்பதாலும் பெறப்படும். ஆனால் நாளடைவில் பிராமணர்களே இச் சொல்லுக்குரியவராகக் கருதப்பட்டதன் காரணம் பொருள்சுருங்கும் நியதியேயாம். ஒருகாலத்தில் தலைமையுடையார் எவராயினும் அவருக்குவழங்கி வந்த ஐயர் என்னும் சொல் நாளடைவில் பொருளில் சுருங்கி

நம்மில்லங்களில் செய்யவேண்டிய வைதீக காரியங்களில் தலைமை பெற்ற காரணத்தால் இக்காலை ஒரு சாரார்க்கே உரியது போன்று நினைக்கப்பட்டுவருகிறது. "ஐயர் வரும்வரை அமாவாசை காத்திராது" என்பது இதனை வலியுறுத்தும்.

இப்படியே "பிள்ளை" யென்னும் சொல்லின் வரலாறும் சிந்திக்கத்தக்கது. பிள்ளையென்னும் சொல்லைப் "பில்ல" எனத் தெலுங்கிலும், "பிள்ளெ" எனக் கன்னடத்திலும் காண்கின்றோம். இச்சொற்களின் தாதுவாகப் "பிள்" என்பதையே கூறவேண்டும். பிள்ளப்படுவது பிள்ளையெனப்பட்டது. பிள் + து = பிட்டு ஆதல் காண்கிறோம். எனவே ஒருகாலத்தில் பிள்ளைச்சொல் இளையபொருள்களைக் குறித்ததாதல் வேண்டும். "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்று இளமை," "தவழ்பவை தாமும் அவற்றோரன்ன" என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களால் பறவைகளுக்கும் ஊர்வனவற்றுக்கும் பிள்ளையென்னுஞ் சொல் அக்காலத்து வழங்கப்பட்டதறியப் படுகின்றது. மரபியல் 8, 9, 10-ஆம் சூத்திரங்களால் பன்றிக்குருளை, புலிக்குருளை, முயற்குருளை, நரிக்குருளை, என்றவாறேபோலப் பன்றிப்பிள்ளை, புலிப்பிள்ளை, முயற்பிள்ளை, நரிப்பிள்ளை என்ற வழக்குத் தொல்காப்பியர் காலத்து இருந்தமை அறிகிறோம். ஓரறிவுயிர்களையும் "பிள்ளை" என்னும் சொல் உணர்த்தி வந்தது, என்பது "பிள்ளைகுழவி கன்றேபோத்தெனக் கொள்ளவும் அமையும் ஓரறிவுயிர்க்கே" எனும் சூத்திரத்தால் தெரிய வருகிறது. அதனால்தான் "தென்னம்பிள்ளை" "கமுகம்பிள்ளை" என்ற வழக்குகளும் தோன்றின. "பெண்ணும் ஆணும் பிள்ளையுமவையே" என்னும் மரபியல் சூத்திரத்தால் "பிள்ளை எனும்சொல் தனியே சொல்லப்பட்டவழி உயர்திணையையே குறிக்குமென்பது அறிகிறோம். உதாரணமாக, பிள்ளைபிறந்தது என்னுமிடத்து உயர்திணைக்குழவியே குறிக்கப்படும். கம்பரும் "உருவறியாப்பிள்ளையமுத பெரியோரையென்சொல்ல" என்றார். இவ்விடத்தில் இச்சொல் உயர்திணையையே குறித்ததாதல் வேண்டும்.

(தொடரும்)

---

# வள்ளல் அதியமான் நெடுமானஞ்சி

(ஒரு சிறு நாடகம்)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளை அவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி, தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 13. மலர் 8. பக்கம் 317.)

## இயல் ரு.—காட்சி க.

உறுப்பினர் :—ஔவையார் ; அதியமான்.

இடம் :—அதியமான் மாளிகை.

பொழுது :—மாலைப்போது.

[அதியமான், ஔவையாரைத் தொண்டமான்பால் தூதுபோகவேண்டுதல்]

ஔவையார் :—வெற்றிமிகும் தப்பாத வாளினை ஏந்திய வனே! போரில் பகைஞர் மடியுமாறு அழித்த வீரவாளை மிளிரும் கைகளையுடையவனே! மிக்க மகிழ்ச்சிக்குரிய மதுவினை யுடைய அதியர் தலைவ! எதிர்த்தவரைப் போர்முனையிற் கொல்லும் வீரவாழ்வும் பொன் மாலையும் அணிந்த அஞ்சி வேந்தே! நீ, பழைய பெரிய மலையினில் எவரும் அடைய முடியாத உயரத்து இரு பிளவுகளின் இடையே தோன்றிய சிறு இலைகளைப்பெற்ற நெல்லியின் பழத்தை, அஃதுண்டவரடையும் பெருவாழ்வை உணர்த்தாது, பால் போன்ற பிறைநிலா நெற்றி மீது விளங்கும் திருமுடியையும் நீலமான அழகிய கழுத்தை யுடைய, ஒப்பற்ற முதல்வனும் சிவபெருமானைப்போல, நான் சாகாமலிருக்குமாறு எனக்குந்தந்து மகிழ்ந்தனையே!

அதியமான்:— அம்மையே, ஒன்றுக்கும் பற்றாத யான், உண்டு உலகுக்குச் சுமையாவதினும், உலகு அவாவும் விழுமிய கல்விச் செல்வம் படைத்த தாங்கள் வாழுதல் சிறப்பன்றோ?

**ஔவையார்:**—காவல் மதில்சூழும் பல அரண்களைவென்ற நெடுமான்மன்ன ! யாழ்போல இனிய ஓசையும் பெறாது; இசைக்குரிய கால அளவும் கூடியிராது; பொருளும் உணர இயலாது; ஆயினும், பிள்ளையின் மழலை மொழிகள் தந்தைக்கு அன்புநிலை ஆகின்றன. அதுபோல, நீ அருள்புரிதலால் எனது வாய்ச்சொற்களும் அவ்வாறே அமைகின்றன. மேலும் என்னை யொத்த புலவர்கள், தமது நெஞ்சை நோக்கி ' உண்ணவிரும்பும் நெஞ்சமே ! நீ பரிசுக்காக வருந்தாதே; யாம் ஒருநாள்மட்டும் செல்லாது, இரண்டுநாள்மட்டும் போகாது எத்தனையோ முறை, பல நண்பர்களோடு சென்று பழகினாலும், முதன்முறையாகப் பெற்ற அன்பைப்போலவே, அணிகள் பூணப்பெற்ற ஆனையையும், இயலும் தேரையும் உடைய அதியமான், எப்போதும் பெற்றுளான். பரிசுபெறுகின்ற நாள் கூடினாலும் குறைந்தாலும், யானை தனது பெரிய கொம்புகளின் நடுவேவைத்துள்ள ஒருவாய் உணவுபோல அப்பரிசு நமது கையிலிருப்பதேயாகும், அதுபொய் அல்ல. அவன் திருவடி வாழ்க' என நாளும் வாழ்த்திவருவது பொய்க்குமா?

**அதியமான் :**—அன்னாய் ! ' எட்டுத் தேர்களை ஒரேநாளில் செய்யும் தச்சன் ஒரு திங்கள் முயன்று முடித்த ஒருதேரின் கால்போன்ற வலிமையுள்ளவன் ' எனவும் ' அணி வகுக்கப் பெற்றனவும் முன்னதாக செல்வனவும் ஆய படைகளால் அவனுடன் போர்புரிவேம் என மொழியும் சொற்களை....சிறந்த வலிமையால் மேன்மைபெற்று விளங்கும் நீண்ட வேலினைப் பெற்ற மழவர்களின் பெருந்தலைவனும் ஒளிமிக்க, தொழில் நுட்பமுள்ள, அணிகள் அழகு செய்யும் மார்பனும் போர்க்கள வேள்வியால் நல்ல சிறந்த போரினைப்புரியும் முழவம்போன்ற வலிமையான தோளைப்பெற்றவனும் ஆய, என் தலைவனைக் காண்பதற்கு முன்னதாகவே, எத்தகையவராக இருப்பினும் காப்பாற்றிக் கொள்ளுங்கள் ' எனவும் பலவாறு என்னைத் தாங்கள் புகழ்ந்துரையாடினும் என் உள்ளம் அவற்றைக் கேட்டும் அமைதியுறவில்லை. மலையன் ஒருதிசையிலும், மூவேந்தர் மற்றொருபுறமும், இன்னொரு பக்கமும் திதியன்,

பொருநன், எருமை யூரன், இருங்கோவேள்மர் என்பவர்களும் என் மீது நாளும் அழுக்காறும் வஞ்சமும் கொண்டவர்களாக வுள்ளனர். போதாக் குறைக்குக் காஞ்சித்தொண்டனும் என்னை வெறுக்கின்றனனும்.

ஔவையார் :—'பெரும! ஊர்ச்சிறுவர்கள் தனது வெண்மையான கொம்புகளைக் கழுவுமாறு நீர்த்துறையினில் அடங்கியிருக்கும் பெரிய யானைபோல, புலவர்களாகும் எங்கட்கு இனிய வனுகின்றாய்; பின்னர் அவ்யானை பிறர் அணுக முடியாதவாறு பெற்ற மதங்கொண்ட நிலைமையைப்போல, உனது பகைவர்களுக்கு நீ கொடியவனுகின்றாய்.' என்ற செய்தி உலகமறிந்திருக்க, ஏனோ இம்மன்னர்பொருட்டு நீ கவலையுறவேண்டும்?

அதியமான் :—அம்மே! தாங்கள் என்சொலினும் என் திடங்கொண்ட நெஞ்சம் இதுபோது விடங்கொண்ட மீனைப்போலக் கலங்குகின்றது. எனக்குற்ற உழுவலன்பன் எனக் கருதப் பெற்ற, காஞ்சித்தொண்டமானும் மாற்றலர் தம் கூட்டுறவால், சார்ந்ததன் வண்ணமாகி எமது முன்னைய நட்புமேன்மையையும் எவ்வாறோ மறந்தனன். அவன் செயலே என்னைப் பெரிதும் வருத்துகின்றது.

ஔவையார் :—"எழுமரம்போன்ற, முளந்தாளினைத்தொடுகின்ற பெரிய கைகளோடுற்றவனே; தவறாத வலிய கைகளையுடைய மழவர்களின் தலைவனே! முறிந்த வளைபோன்ற மலர்ந்த காந்தட்பூ, இலைமிக்க மல்லிகையோடு மணம் வீசும் மலைச் சரிவினிலுள்ள கடும்புலி சீறினுல், அதனை எதிர்க்கும் மான் கூட்டங்களுமுண்டோ? ஞாயிறு வெப்பமுற்றுத்தோன்றும்போது மருண்டவானத்தும் திசைகளினும் செறிந்த இருள் நிறையுமோ? அச்சு உறசிப் பார்மீது படிய நகர்ந்த, பண்டம் நிறைந்த வண்டியுருளையின் அழுந்திய நிலையைப் பொருட்படுத்தாது மணல்வரிகள் சிதறவும் கற்கள் பொடிபடவும் நடக்கும் பெருமிதங்கொண்ட வலிமைமிக்க எருதுகளுக்குச் செல்ல முடியாத வழிகளுமுண்டோ? அதுபோலநீ, போர்க்களம்புகுந்தால், பெரிய உலகமாகிய நிலத்தைப்பெற்று ஆரவாரஞ்செய்யும் வீரர்

களும் உளரோ?'' எனவே மன்ன, நீ எதன்பொருட்டும் கவலற்க: உன் நெஞ்சம் விழைவதை என்பால் கூறின் யான் இயன்றன ஆற்றுவன்.

அதியமான் :—எம்மனோர்க்கு உற்ற துணையாய தாயே! என்பொருட்டுத் தாங்கள், காஞ்சிவேந்தன் தொண்டமான்பாற் சென்று அவனது நட்பு எனக்கு என்றும் இருக்குமாறு செய்ய வேண்டும். எனது கருத்துக்கு இயைந்த அவனது கூட்டுறவு என்னை இன்னும் மிகுந்த வலிமைபெற்றவனாக்கும். இதுவே எனது உளம்நிறைந்த விருப்பமாம்.

ஔவையார் :—அன்புடையாரோடு உண்டு உறவுபெற வல்லவனே; போர் முனையிலும் கொடைத்திறன் கெடாதவனே; அறிவிலாதாரும் மகிழ்வோடு நின்னையே துணையாகக் கருதும் பெருநிலை படைத்த நெடுமான் அஞ்சியே! நீ வீட்டின் இறவானத்தில் செருகப்பெற்ற தீக்கடைக்கோல்போல, நினது வலிமை வெளிப்பட வேண்டாத நாளில் அடங்கி வாழவல்லவனாகின்றாய். இன்னும், அத்தீக்கடைக்கோலால் கக்கப்பட்டு வெளியாகும் காட்டுத்தீயையொப்ப, நீ விரும்பியபோது மிகவும் வலிமைபொருந்திய வீரனாகவும் விளங்குகின்றாய். ஆதலால் எம் நண்ப! நீ வளமையிற் குறைந்தாயெனக் கருதி அஞ்சற்க. நின்னை வெல்வார் எவரும் ஈண்டில்லை: இஃது உறுதியே. யானும் இன்றே தொண்டமான்பாற் சென்று, அவனும் நீயும் நேர்மையுற்ற நேசராக நெடிதுவாழ முயலுவேன். கவலற்க: வாழ்க மன்ன! வாழ்க நின்கொற்றம். செல்கின்றேன். விடைதருக.

அதியமான் :—தாயே! வணக்கம். அவ்வாறே ஆகுக. எனது என்றும் நீங்கா நன்றியையும் அன்பினையும் ஏற்றருள்க. (நின்று கூப்பி வணங்குதல்.)

---

இயல் ௩—காட்சி௧ முடிவு.

---

# அவிமாரகம்

திரு. T. S. நடராசன் B. A., எலத்தூர், சீர்காழிதாலூகா.

(முற்றொடர்ச்சி துணர் 13 மலர் 9 பக்கம் 352)

இஃது இவ்வாறாக, இயக்கன் மலயமலையிலுள்ள தன் ஆசிரியராகிய அகத்தியமுனிவரை வழிபடுவதற்காகத் தன் மனைவியுடன் வானவூர்தியிற் சென்றான். மிக உயரத்திலிருந்து இம்மண்ணுலகத்தின் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தான்; பெரிய மலைகள் களிறுகளைப் போலவும், மரங்கள் புற்களைப் போலவும், மண்ணுலகின் மேற்பரப்பு மேடுபள்ளமின்றிச் சமமாயிருப்பது போலவும், ஆறுகள் வெண்மையான கொடிகளைப்போலவும், மிகப்பெரிய மாளிகைகள் சிறு புள்ளிகளைப் போலவும் காணப்பட்டன. இயற்கையழகில் ஈடுபட்டுச் சென்ற அவ்வியக்கன் அவிமாரகனிருந்த குன்றுக்கு மேலே வருங்கால், அவனது துணைவி சிறிது இளைப்பாறிச் செல்ல வேண்டுமென்றனள். ஆதலின், அவன் அக்குன்றின்மீது இறங்கினான். பின்னர், அவர்களிருவரும் பொழுது போக்குக்காக மலர் கொய்யத்தொடங்கி, அவிமாரகனிருந்த இடத்தை அணுகினர். இதற்கிடையில், அவிமாரகன் கடவுள் வணக்கத்தை முடித்துவிட்டுக் குன்றின் உச்சியிலிருந்து கீழே விழுவதற்காக அங்குமிங்கும் நோக்கினான்; தன்னெதிரே நின்ற இயக்கனைக்கண்ணுற்று, அவன், எவரும் இறப்பதற்குமுன் அவர்முன் தோன்றும் தேவனோ என்று நினைத்து அவனைநோக்கி, 'நீயார்' என்றான். இயக்கன், தான் மேகநாதன் எனப்பெயரிய இயக்கனென்றும், அகத்திய முனிவரைக் காணுதற்கு மலயமலைக்குச்செல்லும் வழியில் அங்கு இறங்கநேர்ந்ததென்றும் கூறினான். பின்னர், மேகநாதன் அவிமாரகனைநோக்கி, 'நீ இங்குத்தனியே வந்ததன் காரணம்யாது? நீ ஏன் வாட்டமுற்றிருக்கின்றனை?' என்று வினவினான். அவிமாரகன் தன் பெயரைமாத்திரங்கூறித் தன் நிலைமையையும்

எண்ணத்தையும் வெளியிட வெட்கமுற்று வாளா இருந்தான். இயக்கன் தன் மந்திரவன்மையால் அவிமாரகனது காதல் வரலாறு முதலியவற்றை யுணர்ந்து, அவனது நிலைமைக்கு இரங்கி, மந்திர மோதிரமொன்றை அவனிடம் தந்து, 'அவிமாரக, இக்கணையாழியை நீ இடது கைவிரலில் அணிந்து கொண்டனையாயின் பிறர் கட்புலனுக்குப் புலப்படாத தன்மையை அடைவாய்; அப்போது நீ எதைத்தொடநேரிடினும் அப்பொருளும் பிறர் கண்களிலிருந்து மறைந்துபோகும்; பின்னர் நீ அதனை வலதுகையில் அணிந்தால் எல்லோருக்கும் கட்புலனுதற்குரிய நிலையை அடைவாய்; இஃது உனக்கு மிகவும் பயன்படும்' என்றனன். அவிமாரகன் அளவற்ற மகிழ்ச்சியோடு அதனைவாங்கி அதன் தன்மையைப் பரிசோதித்து அறிந்தான். இடதுகையில் அணிந்தபோது, தான்மறைந்து போயினமையையும் தன்நிழல் கூடத்தோன்றாமையையும் உணர்ந்தான். தனது நன்றியை முழுமனதுடன் மேகநாதனுக்குத்தெரிவித்து அவனது உறுதியான நட்பை விரும்பினன். இயக்கன் அதற்கு இணங்கியதோடு, இன்றியமையாமை நேர்ந்துழித் தன்னை நினைக்கின், உடன்வந்து உதவிபுரிவதாக உறுதிகூறி விடைபெற்று மனைவியோடு மலயமலைக்குச் சென்றான். நம் அவிமாரகனே சிறிதும் காலந்தாழ்த்தாது அரண்மனையை விரைவில் அடைந்து கணையாழியின் உதவியால் தன்னை மறைத்துக்கொண்டு, இளவரசியின் அந்தப்புரத்தை நண்ணி அங்கு நடைபெறுவனவற்றைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

அவிமாரகன் பிரிந்ததிலிருந்து இளவரசி தன் மகிழ்ச்சியை இழந்தாள்; துன்பக்கடலுள் மூழ்கினள்; கொள்கொம்பை இழந்த பூங்கொடிபோல வாடினள்; பிறரோடு உரையாடுவது அவளுக்குத் துன்பத்தை விளைத்தமையின் தனித்திருக்க விரும்பினள். அவளது நிலையைக்கண்ட தோழியர் வருந்தி அவளை எப்போதும் சூழ்ந்தவண்ணமாயிருந்தனர். நாட்செல்லச்செல்ல இளவரசி, காதலனைப்பிரிந்து உயிர்நீங்கிய உடலைப்போன் றிருப்பதைவிட இறந்துபடுதல் நன்மையெனக் கருதினள்;

அவ்வெண்ணம் முதிர்ந்து வந்தது. அவிமாரகன் அங்குச் சென்றபோது, தன் காதலியைத்தான் நெருங்கமுடியாதவாறு அவள் தோழியரால் சூழப்பட்டிருப்பதைக்கண்டு அண்மையில் பிறர் காணுதவாறு நின்முன். அப்போது, இளவரசி எங்ஙனமாயினும் அன்று தன் உயிரை நீக்கக் கருதியவளாய்த் தனக்குத் தலைநோய் என்றுகூறி அந்தப்புரத்தின் உப்பரிகைமேற் சென்முள். அவளது எண்ணத்தைச் சில குறிப்புக்களால் உய்த்துணர்ந்த நளினிகை அவளைப் பின்தொடர்ந்தாள். யாவரும் காணுதற்கரிய அவிமாரகனும் பின்சென்முன். இளவரசியின் தலைநோயைப்பற்றிக் கேள்வியுற்று அரசி யனுப்பிய ஒரு பணிப் பெண்ணும் அங்கு வந்துசேர்ந்தனள். இதனை நன்மையாகக் கருதிய இளவரசி, நளினிகையைத் தான் நீராடற்குரியவைகளை அமைக்குமாறு கூறி அனுப்பிவிட்டாள்; அவள் சென்றபின் தலைநோய் நீங்கிய செய்தியைத் தன் அன்னைக்கு உணர்த்துமாறு அப்பணிப்பெண்ணையும் அனுப்பிவிட்டுக் கதவைத்தாழிட்டாள். பிறகு அவள் தன் ஆருயிரைப் போக்கிக்கொள்ள யத்தனித்தாள். இவற்றையெல்லாம் அண்மையிலிருந்த அவிமாரகனும் பொறுமையுடன் கவனித்துவந்தான். அப்போது எதிர்பாராதவாறு வானங்கறுத்து இடியும் மின்னலும் உண்டாயின. இடியோசை கேட்ட இளவரசி நடுக்கமுற்முள் ; வெய்துயிர்த்தாள்; அலறித் தன்னைக்காப்பாற்றுமாறு ஆருயிர்த்தோழரை அழைத்தாள். அந்நிலையில் அவிமாரகனும் கணையாழியை வலதுகையிலணிந்து அவளது கண்களிக்கத் தோன்றினன். பிரிந்தவர் கூடினல் அன்னோரது மகிழ்ச்சி அளவிட்டுரைக்கற்பாலதோ! காதலர் ஒருவரையொருவர் தழுவி மகிழ்ந்தனர். நீராடற்குச்சித்தஞ் செய்யச்சென்றிருந்த நளினிகை திரும்பிவந்து கதவு தாழிடப் பட்டிருப்பதைக் கண்டு ஐயமுற்றுக் கலங்கியிருக்கையில் கதவு திறக்கப்பட்டது. நளினிகையும் நிகழ்ந்தவற்றை யுணர்ந்து உவகைபூத்தாள். பின்னர், காதலர்கள் முன்போல் இனிது வதிந்தனர். கணையாழியின் வன்மையினல் சிறிதும் அச்சமின்றி இருந்தான் அவிமாரகன்.

சின்னுட்கள் சென்றபின்னர், வாரணுசிக்குச் சென்ற புதிகன் மணமகனுகிய செயவர்மனையும் அவனது தந்தையையும்

தாய் சுதர்சனையையும் மற்றையோரையும் அழைத்து வந்தான். இளவரசியின் மணவினையும் விரைவில் நடைபெறும் நிலையில் இருந்தது. ஆனால் மணமகளின் தாய் தனது தமையன் சௌவீர மன்னனது செய்திகளையறியாமல் திருமணத்தை உறுதிசெய்தல் கூடாதென்று தடுத்தனள். ஆதலின் குந்தி போசன் அரசியின் விருப்பப்படி சில நாட்களாவது காலந் தாழ்த்த வேண்டுவதாயிற்று. இச்சமயத்தில், சௌவீரநாட்டு அமைச்சர்கள் தமது அரசன் வைரந்திய நகரத்திலேயே மறைந்து வாழ்ந்து வருகின்றனன் என்று குந்திபோசற்குச் செய்தியனுப்பினர். உடனே குந்திபோசன் விரைந்துசென்று தன் தன் மைத்துனனையும் தங்கையையும் அழைத்துவந்தான். தன்னை வினவிய குந்திபோசனுக்குத்தான் மறைந்து வாழ்ந் தமைக்குரிய காரணங்களையும் முனிவரது சாபம் நீங்கியமை யையும் சௌவீரமன்னன் அறிவித்தனன்; பின்னர்த் தன் மகன் அவிமாரகன் தன்னை நீங்கிச்சென்று சில திங்களாகியும் அவனைப்பற்றிய செய்தியொன்றும் தெரியவில்லை யென்றும் கூறி வருந்தினன். இதனைக்கேட்ட குந்திபோசனும் மற்றை யோரும் பெரிதும் வருத்தமுற்றனர்.

முக்காலமும் அறிய வல்ல முனிவராகிய நாரதர் இச்சம யத்தில் குந்திபோசனது அவைக்கு எழுந்தருளினர். குந்தி போசனும் சௌவீரமன்னனும் அவரை எதிர்கொண்டு சென்று வணங்கி வழிபாடுசெய்தனர். பின்னர் அவர் வாயிலாக அவி மாரகன் உயிரோடு வாழ்வதை யறிந்து எல்லோரும் பெருமகிழ் வுற்றனர். அவனுடைய செய்தியை விரிவாக அறிய எல் லோரும் விரும்பியமையின், முனிவர்பெருமான் குந்திபோசனது தங்கையாகிய சுதர்சனையை அழைத்துவரச்செய்து அவள் முன்னிலையில், குந்திபோசனது வினாக்களுக்கு விடை யளிக்கு முகமாக, அவிமாரகன் குந்திபோசனது புதல் வியை மணந்து வைரந்திய நகரத்திலேயே வாழ்வதாகத் தெரி வித்தனர். குந்திபோசனுக்கு ஒன்றும் விளங்கவில்லை; சிறிது நேரம் மயங்கி, முனிவர் தன்னைப் பரிகசிக்கின்றனரோ என்று ஐயுற்றான். முனிவர் புன்னகைபுரிந்து அவிமாரகன் இளவரசி

யைக்காப்பாற்றியது முதலாக அன்றையவரை நிகழ்ந்த செய்தி களை விரித்துக்கூறியதோடு அரசர்க்குரிய கந்தர்வமணமுறையில் அவிமாரகன் இளவரசியை மணந்தனன் எனக்கூறி முடித்தனர். இவற்றால் குந்திபோசன் மட்டிலா மகிழ்ச்சியடைந்தனனேனும் தன் தங்கைசுதர்சனைக்குச் செய்துள்ள உறுதிமொழியை நிறை வேற்ற முடியாமைக்கு வருந்தினான். நாரதர் குந்திபோசனது வருத்தத்தையும் நீக்கிவிட்டார். அவர் சுதர்சனையை விளித்து அவிமாரகன் அவளது மூத்த புதல்வனென்றும் தீக்கடவுளை வழிபட்டு அவள் அவனைப் பயந்தாளென்றும் அதனால் அவன் இளமையிலிருந்தே பேரழகுடன் மாந்தர்க்கில்லாத வலிமை யும் வீரமும் பெற்று விளங்குகின்றனென்றும் தனது செல்வனை மையின் அவன் தீயிற்பாய்ந்தபோது அங்கியங்கடவுள் அவனை எரிக்கவில்லையென்றும் கூறினர். மேலும், முனிவர் சுலோசனை யும் சுதர்சனையும் ஒரேகாலத்தில் குழந்தைகளை ஈன்றனரென் றும் சுலோசனையின் மகவு உடனே இறந்து போயினமையால் சுதர்சனை தனது குழந்தையைத் தனது தமக்கையிடம் பிறரறி யாமல் கொடுத்தனளென்றும் அவனே அவிமாரகனென்றும் கூறி அவ்விருவரும் பழைய நிகழ்ச்சிகளை நினைவுகூரும்படி செய் தனர். பின்னர், அவர் குந்திபோசனது இரண்டாம் புதல்வி யாகிய சுமதி என்பாளைச் செயவர்மனுக்கு மணமுடிக்குமாறு அறிவுறுத்தினர். இதற்கிடையில், அவிமாரகனும் இளவரசியும் மணமக்கள்போல ஒப்பனை செய்யப்பெற்று அவைக்கு அழைத்து வரப்பட்டனர்; அவையோர் மலர்மாரிபொழிந்தனர். பின்னர், ஒருநன்னாளில் முனிவர்பிரானது திருமுன்னர், திரு மணங்கள் மிகுந்த சிறப்புடன் நடைபெற்றன.

மணமக்கள் சின்னாள் குந்திபோசனது அரண்மனையில் அவனால் நன்கு உபசரிக்கப்பெற்றுத் தங்கியிருந்து பின்னர் தத்தம் நகரங்களுக்கு ஏகினர். நாடுதுறந்து சென்று ஓராண் டின் பின்னர்த்திரும்பிய தம் மன்னனையும் அரசியையும் வாழ்க் கைத்துணையோடு கூடிய இளவரசனையும் சௌவீரநாட்டு மக்கள் எதிர்கொண்டு பெருமகிழ்ச்சியோடு விழாவாற்றினர்.

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற்றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர்.



# செப்ப முடையார்க்குச் செய்யும் விண்ணப்பம்

வித்துவான். திரு. வேங்கடராசலு அவர்கள்,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

(முற்றொடர்ச்சி துணர் 13, மலர் 9, பக்கம் 336.)

5. வழங்குதற்கு எளிதாகிய அங்கனம் என்னுஞ் சொல், வழங்குதற்கு அரிதாகிய அங்ஙனம் எனத் திரியாது என்றார்கள். இதனை அறியின், மெல்லொற்றுத் தன் இனவல்லெழுத்தோடு கூடி வருஞ்சொல் வழங்குதற்கு எளியது என்பதும், மெல்லெழுத்து இரட்டித்து வருஞ்சொல் வழங்குதற்கு அரியது என்பதும் அவர்கள் கருத்தாதல் நன்குபுலனாகும். ஆகவே, வழங்குதற்கு எளிதாகிய ஒன்று என்பது வழங்குதற் கரிதாகிய

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | | ,, | ,, | ஒன்னு என்றும், |
| ,, | அன்று | ,, | ,, | அன்னு ,, |
| ,, | கன்று | ,, | ,, | கன்னு ,, |
| ,, | என்று | ,, | ,, | என்னு ,, |

வழங்குதல் என்னை? அன்று முதலியவை மலையாளத்தில் அன்னு முதலியவாயே வழங்குகின்றன. அன்றியும, மங்கலம் கஞ்சி சந்தனம் என்னுஞ் சொற்கள் அம்மொழியில் முறையே மங்ஙலம் கஞ்ஞி சந்நனம் என்று இருவழக்கிலும் வழங்குகின்றன. ஒன்னு அன்னு கன்னு என்னு என்பவையே வழங்குதற்கரியவாகலின் ஒன்று அன்று கன்று என்று எனத் திரிந்தன என்பதும், அவ்வாறே, மங்ஙலம் கஞ்ஞி சந்நனம் என்பவையே வழங்குதற்கு எளியவாகிய மங்கலம் கஞ்சி சந்தனம் என்று திரிந்தன என்பதும் நாட்டாரவர்கள் கருத்தாதல் வேண்டும். வழங்குதற்கு அரிதாகிய அங்ஙனம் என்பதுவே வழங்குதற்கு எளிதாகிய அங்கனம் எனத் திரிந்தது என்றவர்கட்கு, வழங்குதற்கு அரியவாகிய மங்ஙலம் சந்நனம் என்பவையே வழங்கு

தற்கு எளியவாகிய மங்கலம் சந்தனம் என்றாயின என்பதன்றே அமைதியாகும். இனி, மாங்கா தேங்கா என்று மலையாளத்தில் வழங்குதல் போன்று தமிழிலும் மிகப்பழைய காலத்தில் வழங்கின என்றும் அவை வழங்குதற்கு அரியவாகலின், **மாங்காய் தேங்காய்** என்று திரியலாயின என்றும் நாட்டாரவர்கள் கூறுவார்கள். என்னையெனின், ஙக ஒலி வழங்குதற்கு அரியதும் ங்க ஒலி வழங்குதற்கு எளியதும் ஆகும் என்பது அவர்கள் கொள்கையாகலின் என்க.

6. அங்ஙனம் முதலிய சொற்களை அ—ஙனம் என்றிங்ஙனம் பிரித்துப் புணர்ப்பது தொல்காப்பியர்க்குக் கருத்தன்றாகலின், அவர், ஙகரம் மொழிமுதல் வரும் என்று கூறிற்றிலர் என்றார்கள். ஆயின், அங்ஙனம் என்பதற்குத் தொல்காப்பியனார் கொண்ட பொருள் இது என்று நாட்டாரவர்கள் கூறவில்லை. அத்தன்மை, அப்படி என்பது அவர் கொண்ட பொருள் என்பார்களாயின், ஆண்டு, அகரம் சுட்டுப்பொருள் தருதலின் ஙகரம் மொழிமுதல் வந்ததாகும். ஆகவே, அஞ்ஞாலம் அந்நாள் அம்மணி என்னுஞ் சொற்களைப் பிரித்து,

'சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்'

என்று விதிகூறிய ஆசிரியர்,

சுட்டின் முன்னர் ஙஞநமத் தோன்றின்

என்று விதிகூறி அங்ஙனம் என்பதனையும் அமைத்திருப்பாரல்லவோ? அச்சம் அஞ்ஞை அண்ணன் என்னுஞ் சொற்களிலுள்ள அகரத்தைப் போலவே அங்ஙனம் என்பதிலும் அகரஞ் சொல்லுறுப்பாய் அமைந்துளது என்றாலன்றி, அங்ஙனம் என்பதில் ஙகரம் மொழிமுதல் வந்ததாகக் கருதப்படாமை அமையாது. அவ்வாறு கொள்ளின், அங்ஙனம் என்பதன் பொருள் யாது?

வினைத்தொகை பண்புத்தொகைகளைப் பிரித்துப் புணர்க்கலாகாது என்னுங் கருத்தால் அதற்குப் புணர்ச்சிவிதி கூறாதது போன்று அங்ஙனம் என்பதற்கும் புணர்ச்சிவிதி கூறிற்றிலர் என்றார்கள். கொல்யானை அடுகளிறு ஓடுகால் என்னும் வினைத்

தொகைகளில் உள்ள யானை களிறு கால் என்பனவும், கருங் குதிரை கரும்பார்ப்பான் செந்தாமரை வெண்குடை என்னும் பண்புத்தொகைகளில் குதிரை பார்ப்பான் தாமரை குடை என்பனவும் தனித்தும் வழங்குதல்போன்று, அங்ஙனம் என் பதிலும் ஙனம் என்பது தனித்து வழங்குதல் வேண்டுமே. தனித்து வழங்கின், ஙகரம் மொழிமுதலில் வருமென்று கூற வேண்டுமே. வினைத்தொகை பண்புத்தொகைகட்கு ஆசிரியர் புணர்ச்சிவிதி கூறாததன் காரணம்—'கொல் எனத் தொழின்மை உணர நின்றது கொல்யானை எனத் தொகையாயவழி' கொன்ற எனக் காலங் காட்டி நின்றமையின் புணர்க்கப்படாதாயிற்று.' 'கரும் எனப் பண்புணர நின்றது கருஞ்சான்றான் எனத் தொகை யாய வழி, கரும் என்பது கரியான் எனப் பால்காட்டி நிற்றலிற் புணர்க்கப்படாதாயிற்று' என்று உரையாசிரியரும், 'ஆடரங்கு ............என நிலம் முதலாகிய பெயரெச்சத் தொக்க வினைத் தொகைகளை விரிக்குங்கால் ஆடினவரங்கு எனச் செய்த என்னும் பெயரெச்சத்து ஈறுவிரிந்த அகரஈறு இறப்புணர்த்தியும், ஆடாநின்ற வரங்கு, ஆடுமரங்கு எனச் செய்யும் என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த உம்மீறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தியும் அவற்றுளை புடைபெயர்ச்சியைத் தோற்றுவித்து இரண்டு பெயரெச்சமும் ஒரு சொற்கண் ஒருங்கு தொக்குநிற்றலின் அதனை ஒரு பெயரெச்சத் தின்கண் அடக்கிப் புணர்க்கலாகாமையின், புணர்க்கலாகாது என்றார்.' 'கரும்பார்ப்பான் கரும்பார்ப்பனி கரும்பார்ப்பார் கருங்குதிரை கருங்குதிரைகள் என வரும் இவற்றுட் கரியனாகிய பார்ப்பான் கரியளாகிய பார்ப்பனி கரியராகிய பார்ப்பார் கரிய தாகிய குதிரை கரியனவாகிய குதிரைகள் என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்புகொள் பெயர் தொக்கவாறு காண்க. இவற் றுட் கருமை என்னும் பண்புப்பெயர் தொக்கதேல் கருமை யாகிய பார்ப்பான் என விரித்தல் வேண்டும். அங்ஙனம் விரி யாமையிற் பண்புகொள் பெயர் தொக்கதென்று உணர்க..... இங்ஙனம் ஐம்பாலுந் தொகுத்தற்கு உரிய முதனிலையாதலிற் புணர்த்தலாகாமை கூறினார்' என்று நச்சினார்க்கினியரும் கூறி யிருப்பவற்றான் நன்கறியப்படும். இன்னதோ ரிடர்ப்பாடு அங்

ஙனம் என்னுஞ் சொல்லினுள்ள அகரச் சுட்டின்கண் இன்மை யின், அதற்கு விதிகூறுதல் எளிதினியலுமன்றே.' இவற்றால், வினைத்தொகை பண்புத்தொகைகளுக்கு விதிகூற இயலாமல் விடுத்ததுபோல அங்ஙனம் என்பதனையும் விதிகூறாது விடுத்தார் என்று நாட்டாரவர்கள் கூறியது சிறிதும் பொருந்தாமை நன் கறியப்படும்.

7. 'மெய்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தால், அங் ஙனம் இங்ஙனம் முதலிய சொற்களைத் தொல்காப்பியனார் அமைத்துள்ளார் என்றார்கள். 'ர ழ ஒழிந்த மற்றைய மெய் யெழுத்துக்கள் தம்மொடு தாம் மயங்கும்' என்பதுவே சூத்திரத் தின் பொருள். இதனால், ஙகரத்தொடு ஙகரம் மயங்குதற்கு அங்ஙனம் இங்ஙனம் என்னுஞ் சொற்களையே ஆசிரியர் கருதினார் என்று துணிதல் அமையாது. ஆயின், உரை யாசிரியர், எங்ஙனம் என்னுஞ் சொல்லையே உதாரணமாகக் காட்டினாரால் எனின், அதனை நோக்குதும்;

'ய ர ழ என்னும் புள்ளி முன்னர்
முதலா யெழுத்து ஙகரமொடு தோன்றும்'

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், ய ர ழக்களுக்கு முன் ஙக ரம் வருதற்கு உதாரணமாக அவர் (உரையாசிரியர்,)

வேய்ஙனம்
வேர்ஙனம்
வீழ்ஙனம்

என்பவற்றைக் காட்டியுள்ளார். இவ் வுதாரணங்களில், வேய், வேர், வீழ் என்பவை நிலைமொழிகளாகலின், ஙனம் என்பது வருமொழி என நன்கறியப்படும். ஆகவே, ஙகரம் மொழி முதல் வந்ததாகுமன்றே? இவ்வுதாரணமே ஆசிரியர் கருதினா ராயின், 'முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்' என்று ஙகரத்தைப் பிரித்துக் கூறுதலின்றி, 'முதலாகெழுத்துத் தோன்றும் என்ப' என்பது போலன்றே சூத்திரஞ் செய் திருப்பார்? ஙகரம் மொழிமுதல் வாராததனானன்றே அதனை முதலாகெழுத்தோடு சேர்க்காது பிரித்துக் கூறினார்? இச் சூத்திரத்திற்கு உரையாசிரியர் காட்டிய 'வேய்ஙனம்' முதலி

யவை உதாரணமாகுமோ? இதுபோன்றே, 'மெய்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தின் உரையில் அவர் காட்டிய 'எங்ஙனம்' என்னும் உதாரணமும் அமைவுடையதன்று. அங்ஙனம் முதலிய சொற்கள் தொல்காப்பியனார் காலத்தில் வழங்கி யிருக்குமேல் தொல்காப்பியத்திலும் சங்கநூல்களிலும் ஆங் ஙனம் ஈங்ஙனம் யாங்ஙனம் என்பனவன்றே காணப்படல் வேண்டும். அவ்வாறின்றி, ஆங்கனம் ஈங்கனம் யாங்கனம் என்பனவே காணப்படுதற்கு நியாயம் யாது? ஆயின், ஙக ரத்தின்முன் ஙகாம் வருதற்கு உதாரணம் யாதோ எனின், 'பிடியூட்டிப் பின்னுண் ணுங் களிறெனவு முரைத்தனரே' என்னும் அடியில் ஙகரம் இரண்டு வந்திருத்தல்போல்வது உதாரணமாகும். அங்ஙனம் என்பது போலத் தனிமெய் முன்னர் உயிர்மெய் வந்ததுவே அமையும்; இஃது அமையாது எனின், தனிமெய்யோடு தனிமெய்மயங்குதலை இச்சூத்திரத் தாற் கொள்ளாக்கால், 'கண்ண் கருவிளை,' 'பொன்ன் பொறி சுணங்கு' என்பனபோல வருபவற்றிலெல்லாம் மெய்கள் மயங்கி நிற்றற்கு இலக்கணமின்றாகும். அன்றியும், தனிமெய் யோடு உயிர்மெய் மயங்கிய சொற்களை உதாரணங்காட்டினும் ஆண்டு மெய்யொடு மெய்மயங்கிய துணையே உதாரணமாகக் கொள்ளப்படுதல் கருதத்தகும். மெய்மயக்கம் என்பது மெய் யொடு மெய்மயங்குதலேயாகும். இனி, ஙகரமெய்யோடு ஙகர உயிர்மெய் மயங்கிய சொல் இருந்திருப்பின் அஃது உதாரண மாதற்குத் தட்டில்லை.

8. ஆங்கனம்................யாங்கனம் என்பவற்றைப் பிழை யுள்ளதோர் முடிபு என்றார்கள். ஆசிரியர் தொல்காப்பியனாரும் சங்கப்புலவர் பலரும் வழங்கியிருக்குஞ் சொல்லே பிழையுள்ள தாபின், பிழையில்லாத சொல் யாதோ, அறியேன்.

9. அங்ஙனம் முதலிய சொற்களின் வழக்குப் பழமை யதே என்றார்கள். பழமையதாயின் சங்கச் செய்யுட்களில் வந்திருக்குமே. ஆங்கனம் ஈங்கனம் யாங்கனம் என்னும் வடிவச் சொற்களே சங்கச் செய்யுட்களில் காண்கின்றன. ஓரிடத் திலாதல் ஆங்ஙனம் அங்ஙனம் என்னுஞ் சொற்கள் காண்

இன்றில. சங்கச் செய்யுட்களில் ஆட்சியுடைய சொற்கள் புதிய வாய்பாட்டுச் சொற்களாதலும், அவற்றில் வந்திலாத சொற்கள் பழமையவாதலும் காலத்தின் கோலமே.

முகித்தல் என்னுஞ் சொல் பண்டையிலக்கண இலக்கியங்களில் வந்திலாததனால் அதனை வழங்கியது தவறு என்றார்கள். ஆங்கனம்....யாங்கனம் என்னுஞ் சொற்கள் பண்டையிலக்கண இலக்கியங்களில் வந்துள்ளனவாகலின் அவற்றை வழங்கியதும் தவறாயிற்று, நாட்டாரவர்கள் கூறுமந்நியாயம் நியாயமே!

III. காண்கின்றது என்னுஞ் சொல்லைக் குறித்து நாட்டாரவர்கள் எழுதியிருப்பதன் சுருக்கம்:—

1. காண்டல்வினை செயப்படுபொருள் குன்றாததாகலின், காண் என்பதன் அடியிற் பிறக்குஞ் சொற்களைக் காணப்படுகின்றது, காணப்படுகின்றன என்றிங்ஙனம் வழங்குதலே முறை.

2. வேற்றுமொழிப் பயிற்சி ஒன்றே கொண்டு தமிழின் இயல்பினை விளக்கலுறுவார் சிலர்........... தமிழின்கண் செயப்பாட்டுவினை இன்று எனவும் கூறுநிற்பர்.

3. காண்கின்றது என்பதனையே அவர் ('கபிலர்' ஆசிரியர்) நினைவுகூர்ந்து வழங்கியுள்ளார்; காணப்படுகின்றது என்பது பயிற்சிவயத்தால் அவரறியாமலே போந்தது.

4. இது (காண்கின்றது என்பது போன்று செய்வினையாக எழுதுவது), இழி வழக்கு.

5. எத்துணையர் இவ் விழிவழக்கினை விழுமிய வழக்காகக் கொண்டனரோ என உள்ள அச்சம் உண்டாகின்றது.

இவற்றை முறையே ஆராய்தும்:—

1. காண் என்பதன் அடியிற் பிறக்கும் வினைச் சொற்களைச் செயப்பாட்டுவினையாகவே வழங்குதல் வேண்டும் என்பதற்கு,

'வினையே செய்வது செயப்படு பொருளே
... .... .... ....
ஆயெட் டென்ப தொழின்முத னிலையே'

என்னும் சூத்திரத்தை விதியாகக் குறித்தார்கள். ஒரு தொழிற்கு முதனிலை (காரணம்) எட்டு என்பதும் அவை இவை யென்பதும் இச்சூரத்தாற் போதருதலன்றிச் செயப்படு பொருள் உள்ளவினையைச் செயப்பாட்டுவினை வடிவில் வழங் குதல் வேண்டுமென்பது போதருதல் இல்லை. செயப்படு பொருளுள்ள வினைக்கு உதாரணங்காட்டிய உரையாளரெல் லாரும் வனைந்தான் என்று செய்வினையாகக் காட்டினரேயன்றி, வனையப்பட்டது என்று செயப்பாட்டுவினையாகக் காட்டினாரில்லை. செயப்படுபொருள் குன்றுவினையைச் செயப்பாட்டு வினையாக வழங்குதல்வேண்டும் என்பது இச்சூத்திரத்தில் எவ்வாறு புல னாகின்றதோ, அறிகிலேன். நாட்டாரவர்கள் அறிவிப்பார் களாயின் அவர்கள்பால் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பா டுடையேனாவேன்.

'வினையே' என்னும் இச்சூத்திரத்தில் வந்துள்ள 'செயப்படு பொருள்' என்னுஞ் சொல்லால் அறியப்படும் எனின், அது, [1] கருத்தாவின் செயலை அடைந்த பொருள் என்று கருமத்தினை விளக்கியதித்தனை. அச்சொல்லால், தமிழில் செயப்பாட்டு வினை வழங்குதல் உண்டு என்பது அறியப்படும். அத்துணையே யன்றி, செயப்படுபொருள் குன்றாத வினையையெல்லாம் செயப் பாட்டு வினைவடிவில் வழங்குதல் வேண்டும் என்பது பெறப் படாதே. செயப்படுபொருளையே நன்னூலார் செய்பொருள் என்று வழங்கியுள்ளார் 'செய்பொருளாறுந் தருவது வினையே' என்றது காண்க. நாட்டாரவர்களும், தமிழிற் செயப்பாட்டு வினை வழக்கு உண்டு என்பதைக் கூறுமிடத்தே, 'செயப்படு பொருள் என்னும் பெயரிலிருந்தே செயப்பாட்டுவினை யுண்மை பெறப்படுவதனையும்' என்று எழுதியிருத்தலின், அச்சொல் லால், செயப்பாட்டுவினை வழக்கு உண்டு என்பதுமட்டுமே அறியப்படும்.

௨. வேற்றுமொழிப் பயிற்சி ஒன்றே கொண்டு, தமிழில் செயப்பாட்டுவினை இல்லை என்றார் இவர் என யான் அறிகிலேன்.

---

1. கருத்தா செய்யும் செயலின் பயனுக்குச் சார்பாயிருப்பது கருமம் என்பர் வடநூலார்,

ஆயின், செயப்பாட்டு வினைவழக்குத் திராவிட மொழிக்கு இயல்பாயதன்று; வடமொழியினின்று வந்தது என்பாரை யான் அறிவேன்.

1. ' கர்மணிப்ரயோகம் பாஷாஸைலிக்குச் சேர்ந்ததன்று '

2. ' பாஷைக்குச் சொந்தமாகக் கர்மணிப்ரயோகம் இல்லை. இப்பொழுது வழங்கிவருவது வடமொழியின் சரியான மொழிபெயர்ப்பிற்கு வேண்டி இடைக்காலத்தில் கிருத்திரிமமாக ஏற்படுத்தியதொரு ஸம்ப்ரதாயமாகும். இதற்கு லக்ஷ்யம்—முதலாவது, வடமொழி அறியாதவர் கர்மணிப்ரயோகத்தை ஒருகாலும் ஆதரித்தல் இல்லை. பேச்சுமொழியில் செய்வினை வழக்கே கேட்குமாறுளது. பழைய நூல்களில்மட்டுமன்று. எழுத்தச்சன் முதலியோருடைய நூல்களிலும் வடமொழித் தொடர்பு இல்லாதவிடத்துக் கர்மணிப்ரயோகம் இல்லை என்பது என் அனுபவம். " ரகுவம்ஸம் காளிதாசனால் உண்டாக்கப்பட்டது " என்பதற்கு ஈடாக, ரகுவம்ஸம் காளிதாஸன் உண்டாக்கியது " என்றால், சிறிதும் அமையாமையில்லை என்பதன்று இம்முறைமையே மொழிக்கு இயல்பாயது என்றும் தோன்றுகின்றது...............'

[1]'கர்மணி ப்ரயோகத்தைச் சுத்த திராவிடங்களாய வினைச்சொற்களில் அதிகம் ஒழித்தல் வேண்டும்.'

ஈஸ்வரன் செய்யுன்ன தேல்லாம் (செய்கின்றதெல்லாம்) ஸஹிக்கயே (பொறுத்துக் கொள்ளுதலே) உள்ளு (உளது) என்று கூறாமல், ஈஸ்வரனால் செய்யப்பெடுன்னதேல்லாம் ஸஹிக்கப்பெடுகையே உள்ளு என்று பிரயோகித்தால், அது மலையாளம் அன்று என்றே கூறுதல் நேரும்'

என்று, கேரளபாணிணி, மஹாமஹிமை, ஸ்ரீராஜராஜ வர்ம கோயித்தம்பிரானவர்கள் கூறியிருக்கின்றார்கள்.

---

1. கேரளபாணினீயம். சூ. 119. உரை.
2. ,, ,, 81. உரை.
1. ஸாஹித்யஸாஹ்யம். பக்கம். 215.

[2]'கன்னடத்தில் கர்மணி ப்ரயோகம் விசேஷமுடமாக வில்லை. வீடுகேட்டப்பட்டது என்பதற்குப் பதல் வீடுகேட்டிற்று மனெ கட்டிது) என்னும் ப்ரயோகம் ஏராளமாயிருக்கின்றது'.

[3]'மணிமயதாலயங்களு சமேது வைகாவுதத அளதெயலி' என்னும் அடியில், சமைக்கப்பட்டன என்னும் பொருளில் சமைந்தன (சமெதுவு) என்று வந்திருத்தல் காண்க

இக்காட்டியவற்றால், செயப்பாட்டுவினை வழக்குத்திரா விடமொழிகளுக்கு இயல்பாயதன்று என்பதும், செயப்பாட்டு வினையை வழங்க வேண்டியவிடத்துச் செய்வினையை வழங்கும் வழக்கே பெரும்பாலும் உளது என்பதும் போதரும். புக முடம்போடு விளங்குங் கா. நமச்சிவாய முதலியாரவர்கள் கருத்தும் இதுவே.

3. காணப்படுகின்றது என்று செயப்பாட்டு வினையில் யான் எழுதியிருப்பது பயிற்சிமிகுதியால் என்னை அறியாமலே நேர்ந்தது என்று நாட்டாரவர்கள் கூறியிருக்கின்றார்கள். அவ்வாறாயின், அங்ஙனம் இங்ஙனம் யாங்ஙனம் என்பனவும் என்னை யறியாமற் சிலவிடங்களில் போந்திருத்தல் வேண்டுமே. எனது 'கபில'ரில் ஓரிடத்தாதல் அவ்வாறு வந்திலதே. அங்ஙனம் முதலியவை எனக்குப் பயிற்சியில்லாதன என்பார்கள் போலும். ஆயின், கலாசாலை மாணவர்க்காக யான் எழுதியிருக்கும் புஸ்தகங்களில் ஓரிடத்திலாதல் அங்கனம்............... யாங்கனம் என்னுஞ்சொல் வந்தில; அங்ஙனம் முதலிய சொற்களே வந்துள்ளன. இவற்றால், அறியாமல் எழுதும் வழக்கம் என்பால் இல்லை என்பதை நாட்டாரவர்கள் அறிந்துகொள்வார்களாக.

(தொடரும்.)

---

2. சன்னடலேகனலக்ஷணம். பக். 26.
3. தொறவெ ராமாயணம், பாலகாண்டம்.

# சிந்தாமணியின் செந்தமிழ் நலம்

திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள், திருவத்திபுரம்.



(முற்றொடர்ச்சி துணர் 13, மலர் 9, பக்கம் 344.)

"குணமாலையின் சுண்ணமே நல்லது," எனச் சீவகனால் யாவரும் தெளிய விளக்கப்பட்டது தெரிந்ததும், சுரமஞ்சரி, குணமாலைபால் கண்ணற்று நீங்கி விடுகின்றாள். அதனால் குணமாலை பெருந்துயர் அடைந்து, சுரமஞ்சரிக்கும் தனக்கும் பிறந்திருந்த நட்பு இவ்வாறு கெடுதற்குக் காரணம் யாதென ஆராய்ந்து, அது பண்டைத் தீவினை யாமென நினைந்து, அது மேலும் உருத்து வந்து வருத்தாமைவேண்டி, அருக தேவனது அருட்கோயிலுக்குச்சென்று, அவனது திருவடியில் மலரிட்டு வணங்கி, அந்தணர்பலர்க்குப் பொருட்கொடைசெய்து நீராடத் தொடங்குகின்றாள். சுரமஞ்சரியின் பிரிவாற்றாத குணமாலை, அப்பிரிவு நிகழ்தற்குரிய காரணத்தை நெஞ்சில் நினைந்தவழி, ஒருவர் செய்த தீவினை, இன்பக் காரணமாகிய விளையாட்டினுள்ளும் நுழைந்து, துன்பத்துக்குக் காரணமாய், அவ் இன்பத்தைத் துறப்பிக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறது. உடனே, தீவினையின் தீமைப்பயனை உணர்ந்து பிரிந்தேகும் சுரமஞ்சரிபால் தோன்றியிருந்த அன்பினால் குணமாலை மனம் உளைந்து அழுகின்றாள். இஃது,

"இன்பக் காரணமாம் விளையாட் டினுள்
துன்பக் காரணமாய்த் துறப்பித் திடும்
என்பதே நினைந்(து) ஈர்மலர் மாலைதன்
அன்பினால் அவலித்(து) அழுதிட்டாள்"

எனத் தெளியக்கூறப்பட்டுளது. இதற்கு, "இன்பதுக்குக் காரணமாம் கடுநட்புத்தானே பகைக்கும் காரணமாய் ஒரு விளையாட்டினால் நட்பினைத் துறப்பிக்கும் என்கின்ற பழவார்த்

தையையே நினைந்து வருந்தி அழுதாள்" என்றும் கூறுவர். யாது கூறினும், குணமாலை சுரமஞ்சரியின் பிரிவாற்றாது, அன்பினால் வருந்திப் புலம்பினாள் என்பது தேற்றம். உரைவிகற்பத்தின் நலந்தீமையினை உரையாராய்ச்சியில் கூறுவோம். இதனாலும், குணமாலையும் சுரமஞ்சரியும் பழகிய நண்பரல்லர் நட்புப்பெறுவாராயின், அவர்பால் பொறையாகிய பேரறம்தானாகவே அமைந்துவிடும். "இனத்தியல்பதாகும் அறிவு." குணமாலையின்பால்பொறையும், சுரமஞ்சரிபால் பொறாமையும் வேறுவேறு விளங்கிநிற்றலால், அவர்கள் பொழிலிடையே புதுநட்புப் பெற்றாராதல்வேண்டும் என்பது தெளியப்படும். சுண்ண மாறுபாட்டின்கண், வெற்றி எய்தினமையால் பேருவகை கொள்ளற்பாலளாய குணமாலை, தோல்வியுற்ற சுரமஞ்சரிபால் கழிபேரிரக்கம் கொண்டு, அன்பினால் அவலித்தழுவாளாக, புல்லிய சுண்ணத்தின் பொருட்டு, பொறையறத்தின் உருவாய குணமாலையின் நட்பினைத் துறந்து செல்லும் சுரமஞ்சரி, உருவும், திருவும், பிறவும் ஒப்பவுடையளாயினும், குணநலத்தால் ஒவ்வாள் என்பதே துணிபாம்.

மேலும், சுரமஞ்சரி போயினபின், நீராடற்பாலளாய குணமாலை, சினந்தேகிய சுரமஞ்சரிபால் வெறுப்புற்றாளா? அன்றி, அவள் நட்பினையாவது மறந்தாளா? அப்பிரிவுக்குக் காரணமாகிய சுண்ணங்களையாவது முனிந்தாளா? அன்றி, தன் சுண்ணத்தைப்புகழ்ந்து வென்றிகூறிய சீவகனையாவது நினைந்து மகிழ்ந்தாளா? ஒன்றுமில்லை. இந்நிகழ்ச்சியால், இன்பம் எய்துதற்குரிய தான், அதனை எய்தாது துன்பம் எய்துதற்குரிய காரணம் யாதென நினைந்து, அது தன் தீவினையெனத்தெரிந்து, அதனைக்கழுவும் பொருட்டு அருகன்கோயிலை அடைந்து அவன் அடிபணிந்து அறம்பலபுரிகின்றாள்.

குணமாலையின் அன்புடைமை பிறிதொரு செயலாலும் இனிது துணியப்படும். சீவகன் கூறிய தெளிப்புரையைக் கேட்ட மாத்திரத்தே சுரமஞ்சரி இடிப்புண்ட நாகம்போலத் திடுக்கிட்டுச் சொல்லாடல் இன்றி மயங்கிநிற்கின்றாள். அதுபோது, குணமாலை மகிழ்ச்சி சிறிதுமின்றி, அவளது மனத்தின்

மென்மைகண்டு இரங்கி, "பாவாய், நங்காய், என்னோடு பேசா யாயினை; என்னோ? விரைந்து பேசுக" என்று வேண்டுவாள்,

"திங்களங்கதிர் செற்றுழக்கப்பட்ட
பங்கயப்படு வொத்துளைபாவாய்
நங்கை என்னொ(டு) உரையாய் நனிஇல்லை,
இங்கண் என்(று) அடிவீழ்ந்(து) இரந்திட்டாள்."

இதன்கண், சுரமஞ்சரியின் முகம் வாடிக்கூம்பிய தாமரை போன்றதாயினும், மேனி பண்டேபோல் ஒளிகுன்றாது திகழ்தலின், குணமாலை, முன்பு "செம்பொற்பாவையன்னாய்" என்றதுபோலவே, "பாவாய்" என்கின்றாள். முன்பு அவளால் இகழப்பட்ட காலையும், சுண்ணத்தின் ஒண்மையால் புகழப்பட்ட இக்காலையும் குணமாலை, சுரமஞ்சரியை ஒரேவகையாக முன்னிலைப்படுத்துவதால், அவட்கு அச்சுரமஞ்சரிபால் இருந்த நன்குமதிப்பும், வியப்பும் வேறுபட்டில என்பதும், அவள் அடிவீழ்ந்து இரந்து வேண்டுதலால் அவள்பால் பெருகிய அன்புடையளாதலும் விளங்குகின்றன. பகலவன் கதிரால் தகவுறமலர்ந்து அளிமொய்ப்ப ஒளிசிறந்து நிற்கும் தாமரை போலும் கண்ணும் வாயும் உடைய பாவையை ஒத்த நீ, வெண் கதிரின் தண்கதிரால், அளியின்றி ஒளியழுங்கித் தான்றும் பங்கயம்போல், கண்ணொளி மழுங்கி, வாய்மூடி உரையாடா திருக்க வேண்டா என்றற்கு, "திங்களங்கதிரால்செற்று உழக்கப்பட்ட பங்கயப்படு ஒத்துளை" என்றும், புல்லிய சுண்ணம் காரணமாக வேறுபடுதல் நங்கைமார்க்கு நலமன்று என்றற்கு, "நங்கை" என்றும் மொழிகின்றாள். நங்கை என்பது பெண் களிற் சிறந்தவளையன்றோ! இதைக்கேட்கும் சுரமஞ்சரி, முதற் கண் மாற்றம் ஒன்றும் உரைக்கின்றிலள். பின்பு, ஒருவாறு தேறி,

".... .... .... மழைவள்ளல் என்
ஏற்ற சுண்ணத்தை ஏற்பில என்றசொல்
தோற்றுவந்(து) என்சிலம்படி கைதொழ
நோற்பன்; நோற்றனை நீ" .... ....

என்கின்றாள். எனவே, காய்தல் உவத்தலின்றி, உள்ளதன் உண்மை துணிந்து கூறிய சீவகனது மனநிலையை ஓராது, அவன்

தானும் வலியவந்து தன் சிலம்படி தொழுமாறு நோற்பேன் என்று சுரமஞ்சரி தன் தருக்குத் தோன்றக் கூறியவாறும், நின் சுண்ணம் ஏற்பிலதாயினும், நின் நோன்பினுல் ஏற்றது எனக் கூறப்பட்டது என்றற்கு "நீ நோற்றனை" என்று கூறியவாறும் பெறப்படுகின்றன. அன்றி, தன் சுண்ணத்தின் குறையினை நுண்ணிதின் ஆராய்ந்து கூறிய சீவகனது மதிநுட்பத்தை யோர்ந்து, அவன்பால் விருப்புற்று, அவனை மணக்குங் குறிப்பால், "மழை வள்ளல்" என்றும், "என் சிலம்படி கைதொழ நோற்பன்" என்று கூறுகின்றாள் என்று கூறுதலும் உண்டு. அத்துணையமைதி சுரமஞ்சரிபால் உண்டோ என்று, மேலே கூறிய செய்திகளால் ஐயப்படநின்றது. மேலும், "கட்டவிழ் கண்ணி நம்பி சீவகன் திறத்திற் காய்ந்தாள்" (சீவக 904) எனப்பிறாண்டும் சுரமஞ்சரியின் தாயாகிய சுமதி கூறுவதும் காண்க.

குணமாலை, பின்பு, சீவகனுல் அசனி வேகத்தின் முன் னின்று உயிர்காக்கப்பட்டபின், அவன்பால் காதல் கொண்டு அவனையே நினைந்து மெலிகின்றாள். அவள் காமவேட்கை வயத்தளாய் வெருவிக்கூறுவன, பொருளிலக்கண வரம்பினை இறக்கும் நிலையில் இருக்கின்றன. அதுபோது, தன் பெண் மையின் நிலையினையுணர்ந்து, "எண்ணில் காமம் எரிப்பினும் மேற்செலாப், பெண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே" என்று தன்னையே நொந்துகொள்ளுகிறாள். பின்பு, "கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப், பெண்ணிற் பெருந்தக்கதில்" (குறள் 1137) என்பவாயினும், அத்தகுதியிழந்து, "ஓலைதாழ் பெண்ணை மாமடலூர்தலைக், காலவேற்றடங்கண்ணி" யாகிய அவள் கருதுகின்றாள். இக்கருத்துக்கு அமைதி கூறுவார்போல தேவர்,

> "வேலைமாக்கடல் வேட்கை மிக்கூர்தர
> ஓலைதாழ் பெண்ணை மாமடலூர்தலைக்
> காலவேற்றடங் கண்ணி கருதினள்" (சீவக. 999)

என்கின்றார். அம்மட்டோ, அவள்

> "தெளிகயம்மலர் மேலுறை தேவியின்
> ஒளியும் சாயலும் ஒப்புமையில்லவள்
> களிகொள் காமத்திற் கையற வெய்தித்தன்
> கிளியைத் தூதுவிட்டாள் கிளந்தென்பவே"
> (சீவக. 1001)

என்றும் கூறுகின்றார்.

குணமாலையின் வேண்டுகோட்கு இணங்கி அவள் வளர்த்த கிள்ளை சீவகன்பால் சென்று மீள்வதற்குள், அவளது நெஞ்சில் அதன்செயல்பற்றிப் பலவேறு எண்ணங்கள் தோன்றுகின்றன. அவை,

"தன்துணைவி கோட்டியினின் நீங்கித் தனியிடம் பார்த்(து)
இன்துணைவற் சேர்வான் இருந்ததுகொல்! போந்ததுகொல்!
சென்றதுகொல்! சேர்ந்ததுகொல்! செவ்வியறிந்(து), உருகும்
என்துணைவி மாற்றம் இஃது என்றதுகொல்! பாவம்!!"

என்றபாட்டின்கண் காணப்படுகின்றன. தன்துணைவி என்றது சீவகன் மனைவியாகிய காந்தருவதத்தையை, துணைவன் சீவகன், என் துணைவியென்றது, கிளிக்குத் துணைவியாகிய தன்னையே. இவ்வெண்ணங்களால் அலைப்புண்ட நெஞ்சின்கண், கிளியை நினைந்தவழி, அதன்பால் இவ்வலைப்பு உளது போலத் தோன்றுகிறது. அதனால், "அலைப்புண்டல் வினைபேணுகிய எனக்கு அமையும்; என்னாற் பேணப்படுவதொன்று தவிரப் பிறிதொன்று மில்லாத இக்கிளி இவ்வாறு அலைதல்கூடாதே! இஃதென்ன பாவம்" என்பவள், "பாவம்" என இறுதியில் கூறிமொழி கின்றாள். அதன்பால் யாதோர் பாவமும் இன்மை தோன்ற, அதனைப் பின்னரும், "செந்தார்ப் பசுங்கிளியார்" என்று உயர்த்துக் கூறுகின்றாள். பின்பு கிளி சீவகன் தந்தலையைக் கொணர்தலும் மகிழ்ந்து, அவனது வரைவினை எதிர்நோக்கி யிருக்கின்றாள். அவளது காமநிலை பின்னர் ஆராயப்படும்.

இங்ஙனம், சீவகன் வரையுங் காலத்தையே நினைந்துகொண் டிருக்கும் குணமாலைபால், செவிலித்தாய் போந்து, "நின்னை நின்மாமன் மகனுக்கு வரைவுடன்பட்டான்போல் நின்தந்தை விருந்து செய்தான்" என்கின்றாள். மேலும், "அவன் நினக்குப் பரியமாப் பண்டிபண்டியாகச் செம்பொன் கொண்டு வந்து தந்து, நினக்கே என்றும் அடிமையாய்ப் பணிசெய்து நிற்பன்; நின்உருவைக் கிழிமிசைத்தீட்டி, நாடோறும் அதனையே வழிபடுகின்றான்; அவன் நினக்கு மைத்துனன்; வனப்பிலும் மிக்கான்; வளர்நிதிக்கிழவன்; காளை; உத்தமன்; நின் திருப் பெயரல்லது பிறிதொன்றையும் கூறுவதிலன்; ஆதலால் அவற்கு நின்னைக் கொடுக்க எண்ணினர் நின் பெற்றோர்" என்கின்றாள். என்றலும், அது கேட்கப் பொறுளாய், குணமாலை தன் செவி களைக் கைகளாற் புதைத்து,

"மணிமதக்களிறுவென்றான் வருத்தச்சொற் கூலியாக
அணிமதக்களிறனுக்(கு) அடிப்பணி செய்வதல்லால்,
துணிவதென் ? சுடுசொல் வாளால் செவிமுதல் ஈரல்"

என்று கூறுகின்றாள். எனவே, என்னைக்காத்தற் பொருட்டு, அசனி வேகத்தை வென்ற சீவகன் மேற்கண்ட வருத்தத்துக்குக் கூலியாக அவனுக்கு யான் அடித்தொண்டேனும் செய்து வழிபடல் வேண்டுமேயல்லது, பிறனொருவனால் வழிபடப்படுதல் அறமாகாது; அதனை நினைந்து அவற்கு என்னை அடிப்படுத்தல் என்பெற்றோர்க்கும் நன்றியறிதலாய பேரறமாம். அதனைநினையாது, பிறனொருவனுக்குக் கொடுக்கத் துணியுமுகத்தால் உளதாகும் தீமையினை நினையாதது என்னோ? என்றும், அவர் மறப்பினார். அவனது உதவியினை நேர்நின்று பெற்ற யான்மறந்து பிறிது நினைத்தல் எனக்கும் அறமாகாதென்றும் கூறுவாள், " களிறனுக்கு அடிப்பணி செய்வதல்லால், துணிவதென்? " என்கின்றாள். செவிலி, அவள் மைத்துனற்கு உடன்படு முகத்தால் பெற்றோர் நகைமுக விருந்து செய்தமை கூறிவிட்டதனால், அவர் உடன்பட்டவாறே நடக்கும் என்றெண்ணியஞ்சி, " என்னைச் சீவகற்குக் கொடுக்க என்பெற்றோர் நேராராயின், யான் இறத்தல் வேண்டும்; இன்றேல், சிந்தனை பிறிதொன்றாகச் செய்தவர் முயறல் வேண்டும். இவ்விரண்டனுள் ஒன்று நாளையே நிகழவந்தது " என்கின்றாள். இது கற்புடைய மகளிர்க்குப் பொது விலக்கணமாகலின், குணமாலையாகிய குணமாலைக்கு இத்துணிபு பிறத்தல் வியப்பன்று. இதைக்கேட்ட அவள்பெற்றோர், அவள்கருத்துக்குமாறுபடாது அவள் விரும்பிய கணவற்கே மணம்புணர்க்கத்துணிவது நம்மனோர்க்கு வியப்பைத்தருவதாம். இதனை நூற்புணர்ப்பு என்னும் பகுதிக்கண் ஆராய்வாம். இக்காலத்து நூற்புணர்ப்பு முறையின் பெற்றியினை ஆங்கிலப்பேராசிரியரான, டாக்டர். சாமுவேல் ஜான்சன் (Dr. Samuel Johnson) என்பார், " To bring a lover, a lady and rival into the fable; to entangle them in contradictory obligation, perplex them with oppositions of interest and harass them with violence of desires inconsistent with each other; to make them meet in rapture and part in agony; to fill their mouths with hyperbolical joy and outrageous sorrow; to distress them as nothing human ever was delivered; is the business of a modern dramatist, " * என மிக நுண்ணிதாக ஆராய்ந்து தெளிய உரைத்திருத்தலைக் காண்க. (தொடரும்)



* Dr. Johnson's Preface to Shakespeare.

# திருவாய்மொழி

திருவாளர். R. புருஷோத்தம நாயுடு அவர்கள்,
*தமிழ் வித்துவான் அரசர் கல்லூரி, திருவையாறு.*

---

"சித்தர்க்கும் வேதச்சிரந் தெரிந்தோர்கட்கும் செய்தவர்க்கும்
சுத்தர்க்கு மற்றைத்துறை துறந்தோர்கட்கும் தொண்டுசெய்யும்
பத்தர்க்கும் ஞானப் பகவர்க்குமேயன்றிப் பண்டுசென்ற
முத்தர்க்கு மின்னமுதம் சடகோபன் மொழித்தொகையே"
என்பது ஆன்றோர் அருமைத் திருவாக்கு.

திருவாய்மொழியென்பது, சேமங்குருகையோ செய்ய திருப்பாற் கடலோ, நாமம்பராங்குசமோ நாரணமோ, தாமம் துளவோ வகுளமோ, தோளிரண்டோ நான்கோ என்றறுதியிடமுடியாத பெருமையையுடைய காரிமாறப்பிரானால் அருளிச் செய்யப்பட்ட திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கில் நான்காவதாகும்; இது, எழுத்தும் அசையும் சீரும் முடிவு முதலாகத் தொடுக்கப்பட்டு மண்டலவந்தாதியாக அமைந்த ஆயிரம் பாசுரங்களையுடையதாகும். திருவாய்மொழி யென்பதில், திருஅடைமொழி; வாய்மொழி என்பது வேதம்; "மாயாவாய் மொழி வலந்தர வலந்து" என்பது பரிபாடல். இதனை, ஆகுபெயர் எனவும் அன்மொழித்தொகை எனவும் கூறுப. இனி, திரு என்பது, கண்டாரால் விரும்பப்படும் தன்மைநோக்கம்; கண்டாரால் விரும்பப்படுந்தன்மை ஒரு பொருளுக்கு இருக்க வேண்டுமாயின், அது ஒப்புயர்வற்ற பற்பல சிறப்புக்களோடு கூடியிருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. அங்ஙனமாயின், இது, திரு என்ற சொல்லால் புணர்க்கப் பட்டிருத்தலின், இதனுடைய ஒப்புயர்வற்ற சிறப்புக்கள் தாம் எவையெனின்; அவை, சிறியேனால் அளவிட்டுரைத்தல் அரியவாம், ஆயினும், யான் பெரியோர்கள் மூலம் அறிந்த சிலவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன். அவையாவன:—

1. இறைவனாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாருடைய அருமைத் திருவாக்கினின்றும் அவதரித்தல்.

2. ஒருகாலோதினும் கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள் தொடுமணற்கேணியிற் சுரந்து நீர்பாய மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்துவித்து அனபராக்குதல்.

3. தன்னை ஓதினோர்க்கு உள்ளிருள் நீக்கி ஞானச்சுடர் கொளீஇ இறைவனது இணைத்தாமரை யடியிற் சேர்த்தல்.

4. உண்மைப் பொருளை ஐயந்திரிபற உணர்த்திச் சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகோடும் கூடியிருத்தல்.

5. பிரம சூத்திரமும் திருவாய்மொழி முதலிரண்டு பத்தும் ஏகார்த்தப் பிரதிபாதகம் என்று சப்தங்களைக் கொண்டே ஐக்ய கண்டப் படுத்தியிருத்தல்.

6. சூரியமண்டலத்தில் வீற்றிருக்கின்ற இறைவனுடைய திருப்பெயரில் அமைந்துள்ள இரண்டெழுத்துக்கள் (அதாவது உத்) இதன் ஆதியிலும் அந்தத்திலும் அமைந்திருத்தல்.

7. ஆரிய வேதங்களைக் கற்பார்க்கு வரும் ஐயங்களை அகற்றித் தெளிவுபடுத்தல்.

8. இறைவன் திருவீதிகளில் எழுந்தருளுங் காலத்து, இறைவனுக்குப் பின்னர் ஆரியவேதமும், முன்னர் இத்தமிழ் மறையும் ஓதப்படுதல்.

9. ஆரிய வேதத்தினும் இது பற்பல பெருமைகளை யுடைத்தா யிருத்தல்.

10. சத்தியமாய் நித்தியமாய் நிர்த்தோஷமாய் இருத்தல். இன்னோரன்ன பிறவுமாம்.

இவை ஒவ்வொன்றையும் கீழ்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கொண்டு தெளிக.

1 "இப்படி, பகவத்ஸ்வரூப ரூப குணவிபூதிகளை விசத விசததர விசததமாக அநுபவித்து அது உள்ளடங்காமை வழிந்து புறப்பட்ட சொல்லாயிற்று இப்பிரபந்தங்கள்"

"ஸேஸ்வர விபூதியோக்கியமான பாலோடமுதன்னமென் மொழிமுகம் செய்தது, நீர் பால் நெய் அமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே, பரபக்தியாதிமய ஞான அம்ருதாப்தி நிமிக்கிறவாய் கரைமிடைந்து மொழிபட்டு அவாவில் அந்தாதி யென்று பேர் பெற்றது"

(ஆசார்யஹ்ருதயம்)

2 "உயிர்த்தாரை யிற்புக்குறு குறும்பாமொரு மூன்றனையும்
செயிர்த்தார்கு ருகைவந்தார் திருவாய்மொழி செப்ப
[லுற்றால்
மயிர்த்தாரைகள் பொடிக்கும் கண்கணீர் மல்கும்" (கம்பர்)

"தென்குருகூர்ச் சடகோபன் சொல்லா யிரத்துள் இவை,
ஒன்பதோ டொன்றுக்கு மூவுலகு முருகுமே."
(திருவாய்மொழி. 9-5-11)

3 "ஒலிபுக ழாயிரத்திப் பத்து உள்ளத்தை மாசறுக்குமே."
(திருவாய்மொழி 5-3-11)

ஆதித்ய ராமதிவாகர அச்சுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள்நீங்கி வற்றாத பிறவிக் கடல்வற்றி விகஸியாத போதிற் கமலம் மலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே" (ஆசார்யஹ்ருதயம்)

"சுடரிரண்டே பண்டு மூன்றாயின துகடீர்ந்துலகத்
திடரிரண்டாய் வரும்பேரிருள் சீப்பன வெம்பிறப்பை
அடரிரண்டாமலர்த் தாளுடையான் குருகைக் கரசன்
படரிருங் கீர்த்திப்பிரான் திருவாய்மொழிப் பாவொடுமே"
(கம்பர்)

"வண்குருகூர் வண்சடகோபன் சொன்ன ஆயிரத்துளிப் பத்தும், வானின் மீதேற்றி அருள்செய்து முடிக்கும் பிறவி மாமாயக் கூத்தினையே" (திருவாய். 8. 5-11.)

4 "சாதிக்குமே பரதத்துவத்தைச் சமயத் திருக்கைச்
சேதிக்குமே யொன்று சிந்திக்குமே யதனைத்தெரியப்
போதிக்குமே யெங்குமோங்கிப் பொதுநிற்கு மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே யுங்கள் வேதமெங்கோன் தமிழ்ச் சொல்லெனவே"

"சொல்லென் கெனோ முழுவேதச் சுருக்கென்கெனோ"

5 "பாஷ்யகாரரிது கொண்டு சூத்ரவாக்யங்களை ஒருங்கவிடுவர், அதுக்கு மூலம் "விதயஸ்ச" என்கிறபரமாசார்ய வாக்கியம்." [ஆசார்யஹ்ருதயம்]

6 திருவாய்மொழியின் முதற்பாசுரத்தின் முதலில் "உயர்வு" என்று தொடங்கி, ஈற்றில் "உயர்ந்து" என்று முடித்திருப்பதைக் காண்க. ஈண்டு, உயர்ந்து என்பது குற்றுகரமாமாகையால் "குற்றியலுகாமு மற்றெனமொழிப" என்ற தொல்காப்பியத்தின் விதிப்படி, ஈற்றில் புள்ளியிடுக.

7 "பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் தண்பொருநை வருங்குருகேசன் விண்டுசித்தன், துய்யகுல சேகானம் பாணநாதன் தொண்டரடிப் பொடிமழிசை வந்தசோதி, வையமெலாமறை விளங்க வாள்வேலேந்து மங்கையர் கோனென்றிவர்கள் மகிழ்ந்து பாடும், செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித்தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" (வேதாந்த தேசிகர்)

"மாமறையுள், அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளியா மெங்களந் தணர்க்கே"

"தோன்றுவுபநிடதப்பொருள் தோன்றலுற்றார் தமக்கும், சான்றுமிவையென்ற போது மற்றென்" (கம்பர்)

ஸ்வாமி எம்பெருமானார், வேதாந்த சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் செய்தருளுங் காலத்து, "ஆத்மாவுக்கு சேஷத்வ விதுரமான வாக்யம் பிரதிபாதித்து அருளிச்செய்ய, ஆழ்வான் திருவெழுத்துச் சாத்தாதிருக்க பின்னர் திருவாய்மொழியால் ஐயம் தீர்ந்ததை இங்கு நினைவிடுக.

8 "வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர், கோதற்ற ஞானக்கொழுந்தின் முன்செல்க குணங்கடந்த, போதக் கடலெங்கள் தென்குருகூர்ப் புனிதன்கவியோர், பாதத்தின்முன் செல்லுமேதொல்லை மூலப் பரஞ்சுடரே" (கம்பர்)

9 "மண்குடம் போலன்றே பொற்குடம், பேச்சுப் பார்க்கில் கள்ளப் பொய்ந்நூல்களும் கிராஹ்யங்கள், பிறவிபார்க்கில் ஐஞ்சாமோத்தும் ஆறு மூன்றுங்கழிப்பனும், கிருஷ்ண கிருஷ்ணத்வைபாயந உத்பத்திகள் போலன்றே கிருஷ்ண திருஷ்ணாதத்வஜன்மம்" (ஆசார்யஹ்ருதயம்)

"ஆழ்வாராயவதரித்த உன்முகமாய்த் திருவாய்மொழி வெளிப்பட்டதனாலன்றோ வேதங்களினும் முதலில் எண்ணத்தக்கதாயிற்று" (பாதுகாசகஸ்ரம் சமாக்யாபத்தி 26 ஸ்லோகம் மொழிபெயர்ப்பு)

10 "ஆணை ஆயிரம்" "பொய்யில்பாடல்" என்றும், "முந்தை ஆயிரம்" "அழிவில்லாவாயிரம்" என்றும், "ஏதமில் ஆயிரம்" என்றும் இத்திருவாய் மொழியிலே வந்திருப்பனவற்றையும் "ஆகஸ்தியமும் அநாதி" என ஆசார்யஹ்ருதயம் கூறுவதையும் நோக்குக.

ஆயின், ஆழ்வார் மூலம் அவதரித்ததென்னுமிது, நித்யமா மாறுயாங்ஙனமெனின், "முன்னந்திசை முகனைத்தான் படைக்க மற்றவனும் முன்படைத்தான்மறை" என்ற தமிழ்க் கூற்றின் படி நித்தியமான வேதத்தை நான்முகன் படைத்தான் என்பது போல, இதனையும் ஆழ்வார் அருளிச்செய்தார் என்று மித்தனை. அன்றியும், ஆதியில், வேதத்தின் சப்த சந்தர்ப்பங்களை பகவத் கடாக்ஷத்தாலே முற்றுமுணர்ந்து கூறியமை கொண்டு நான் முகனுக்குக் கர்த்ருத்வம் கூறியதுபோல, இங்கும், பகவந்நிர் ஹேதுக்கடாக்ஷத்தாலே தமிழ் வேதத்தின் ஆநுபூர்வியைக் கடாக்ஷித்து ஆழ்வார்கள் அருளிச்செய்தவைகள் ஆகையாலே, ஆழ்வார்கள் அருளிச்செய்தார்கள் என்பதனாலே குற்றமின் றென்றெண்க. மேலும், வேதசாகைகள் முதலில் அத்யயநம் செய்தவர்கள் பேராலே ஆதர்வணம், தைத்திரீயம், காண்வம் என்று வழங்கப்பட்டு அதர்வணர், தைத்திரீயர், கண்வர் என் பவர்கட்குக் கர்த்ருத்வம் உண்டாயிருப்பது போல, இங்கும், "சடகோபன் சொன்ன சொல்" "நாட்கமழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன் வேட்கையால் சொன்ன பாடல்" என்றும் "கலிகன்றி சொன்ன தமிழ்" "விட்டுசித்தன் விரித்தன" என்றும் வருபவைகளாலே தமிழ் மறையும் ஆழ்வார்கள் அருளிச்செயல்களாயிருக்குமென்றறிந்து கொள்க.

இனி, இத்திருவாய்மொழி ஆயிரம் திருப்பாட்டுக்களையும் "நூறே சொன்ன வோராயிரம்" (9-4. 11) "பத்து நூற்றுள் இப்பத்து" (6. 7-11) என்று, இவர் தாமே நூறு நூறு ஆகச் சொன்ன ஆயிரம் என்றும், பத்துநூறு என்றும் பிரித்து அருளிச்செய்வதனாலே பத்துப் பிரிவாகப் பகுத்துப் பகர்ந்தமை விளங்கும். எங்ஙனேயெனில், பத்தாம்பத்தில், இரண்டாம் பதிகமாகிய, "கெடுமிடராய வெல்லாம் கேசவா என்ன" என்னு முதலையுடைய பத்துப் பாசுரங்களில், முதலைந்திற்கும் ஒரு கருத்தும் பின்னைந்திற்கும் ஒரு கருத்துமாக அமைந்திருப்ப தனால், "ஐந்தினோடைந்தும் வல்லார் அணைவர்போய் அமருல கில்" என்றுபிரித்தும், ஒன்பதாம்பத்தில், ஐந்தாம்பதிகமாகிய

"இன்னுயிர்ச் சேவலும் நீரும்" என்னும் முதலேயுடைய பத்துத் திருப்பாட்டுக்களில் முதல் ஒன்பதும் ஒரு கருத்தும், பின்ஞென்றும் ஒரு கருத்துமாக அமைந்திருப்பதனல் "ஆயிரத் துளிவை, ஒன்பதோடொன்றுச்சும் மூவுலகு முருகுமே எனப் பிரித்தும், பத்துப் பாசுரங்கட்கும் ஒரே கருத்தாக இருப்பின், "ஆயிரத்திள் இவைபத்தும்" (6. 6. 11) எனச் சேர்த்தும் செப்புதல் காண்க. ஆதலால், இங்ஙனம் பத்துப் பிரிவாகப் பிரித்துப் பகர்ந்தமைக்கும் ஆழ்வார் திருவுள்ளக் கருத்தொன்றிருக்க வேண்டுமென்பது தேற்றமேயன்றோ? அவ்வாறுயின், அத்திருவுள்ளக் கருத்துதான் யாதெனின், கூறுவன். எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளான இறைவனது மன்பெருஞ் சிறப்பின்தாவாத விழுமிய பொருள்சேர் புகழ்களைப் பற்றிப் பேசப் புக்கது; இத்தமிழ்மறை என்பது தெளிவு. வாச்யத்திற்குள்ள குணங்கள் வாசகத்திற்கும் வேண்டாவோ? வேண்டுமன்றே? ஆதலால், பத்துப் பிரிவாகப்பிரிந்துஅவதரித்ததென்க. எங்ஙனமெனின்?

"உயிரளிப்பான், எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலேவா" என்றும், "பல பிறப்பா, யொளிவரும் முழுநலம் முதலிய கேடிலவீடாம், தெளிதரும் நிலைமையதொழிவிலன் முழுவது மிறையோன்" என்றும், "புலப்படப் பின்னும் தன்னுலகத் திலகத்தனன் தானே" என்றும் "பிறவாப் பிறப்பிலே பிறப்பித் தோரிலேயே" என்றும், "நல்லார் கடம்மை நலம் புரிந்து காத்தற்கும், பொல்லாரைப் பொன்று நெறி போக்கற்கும்—எல்லாம், முந்தையற நாட்டமுய்த்தற்குப் நான் பிறப்பன்" என்றும் தமிழ்மறையும், பிறசான்றோரும் அவன் தானும் அருளியவாறு, இவ்வுலகத்தில் பத்துப் பிறவிப்பிறந்து, அறச்செவி திறந்து மறச்செவியடைத்துப் பிறவிப்பிணி மருத்துவஞகி இருந்தறமுரைத்தும், மன்பதைகளை எல்லாவுலகிற்கு மேலாய வீட்டுலகின்கண் அடைவித்தும் அடிமைகொள் அறவாழி யந்தணனைப்போல, பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவும் ஆயிரத்தின்பாலே பட்ட மாறன் பணித்த இத்தமிழ் மறையும், "நண்ணுவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த,

எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின் பந்தலே சிறப்பப் பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி, தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ் சோலையானே" என்றவாறேயாய் அவதரித்து, (ஈண்டு அசுரர் அமரர் ஆவார் மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தாரும் சேராதாரும்) "ஒலி புகழாயிரத்திப் பத்துள்ளத்தை மாசறுக்கும்" "தெருள் கொள்ளச் சொன்ன ஓராயிரம்" "தூய ஆயிரத்திப் பத்தால் பத்தர் ஆவர்," "உரிய தொண்டராக்கு முலக முண்டார்க்கே" "உடைந்து நோய்களை ஓடுவிக்கும்" "வானின் மீதேற்றி யருள் செய்து" "அருளியடிக் கீழிருத்தும்" "எங்ஙனே சொல்லினு மின்பம் பயக்கும்" இன்னோரன்ன தமிழ்மறையின்படி தன்னை யோதினர்களுக்கு, உள்ளத்துள்ள அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக்கொடுத்து எண் குணத்தான்றாளிற்கு அடிமையாக் கிப் பிறவிப் பிணியைப் போக்கித் தாமரைக் கண்ணனுலகாகிய நிரதிசய பேரின்ப வீட்டுலகிற் செலுத்தி அடிக் கீழிருத்தி அடிமைபுகுத்தி இன்பத்தைப் பயத்தலால் என்க.

"சாம்யத்தாலே வாச்யன் பத்தனாய தோற்றம் போலே தோற்றங்களாயிரத்தின் பத்துப் பத்தான இதின் ஆவிர்ப் பாவம்" என்றஆன்றோர் அருமைத் திருவாக்கின் ஆழ்பொருளை ஆய்க.

(தொடரும்.)



# தமிழ்ச் செய்திகள்

சென்னை மாகாண மூன்றாவது தமிழர் மாநாடு 26-12-37-ஆம் தேதியில் திருச்சிராப்பள்ளியில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தமிழ்ப் பேராசிரியர் திருவாளர் S. சோமசுந்தர பாரதியார் (M. A. B. L) அவர்களின் சீரிய தலைமையில் சிறப்புற நடந்தது. தாகூர் சட்டவிரிவுரையாளர் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை (M. A. M. L.) அவர்கள் பொருள் செறிந்த விரிவுரைகூறி மாநாட்டைத் திறந்தனர். செந்தமிழ்ப் புரவலர், இராவ்சாகேப். திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை (B.A.B.L.) அவர்கள் வரவேற்கும் முறையில் முன்னுரை கூறினர்.

தமிழ் நாட்டின் பல பகுதிகளினின்றும் வந்திருந்த தலைவர்கள் திரு. பாரதியார் அவர்களின் சீரிய தமிழ்த் தொண்டுகளைப் பாராட்டி தலைமையிருக்கச் செய்தனர். தலைவரவர்கள் பேருரை நிகழ்த்திய பின்னர், கீழ்க்கண்ட முடிபுகள் நிறைவேறின.

1. தமிழ் மக்களின் நாகரிகத்தையும், நலத்தையும் பேணி வளத்தற்கென 'தமிழர் சங்கம்' எனும் பேரவை ஒன்று நிறுவ வேண்டும். சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுதற்காக ஒரு தலைவர், ஒரு அமைச்சர் அடங்கிய நிறைவேற்றுக் கழகம் அமைக்கப்பெறும்; மாநாட்டின் தலைவரேநிறைவேற்றுக்கழகம், தொழிற்கழகம், தமிழர் சங்கப் பேரவை இவற்றின் தலைவராவர்' நிறைவேற்றுக் கழக உறுப்பினரில் ஒருவரை அமைச்சராகத் தலைவர் தேர்ந்துகொள்ள வேண்டியது.

2. தமிழ்நாட்டின் எல்லைக்குட்பட்ட பள்ளிக்கூடங்களில் இந்திமொழிப் படிப்பைக் கட்டாய பாடமாக்குவதால், தமிழர் நாகரிகமும், தமிழ்மொழி வளர்ச்சியும், தமிழ்மக்களின் கல்வி முன்னேற்றமும் கேடுறுமெனத் தீர்மானித்து அதனை வன்மையுடன் கண்டிக்கிறது.

3. தமிழ்மொழி வழங்கும் நாடுகளனைத்தையும் ஒருங்கு சேர்த்து தமிழ்மாகாணம் அமைத்தற்கு ஆவன வெல்லாம் விரைவில் செய்துமுடிக்குமாறு உரிய அதிகாரிகளைத் தூண்டுகிறது.

4. தமிழ்மொழியையும் தமிழ்க் கலைகளையும் பல்கலைக் கழகங்கள் வளர்க்கவேண்டிய கடமையை மறந்து, புரியக்கூடிய

உதவிகளை உலோபஞ்செய்வதால் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவவேண்டிய அவசியத்தை வலியுறுத்துகின்றது.

5. வார்தா கல்வித்திட்டமானது நடைமுறைக்கு உதவ மாட்டாதும், நாட்டின் கல்விவளர்ச்சியைக் கேடுறச் செய்வதும் ஆக உள்ளதெனக் கருதுகிறது.

6. உழவர்களின் கடன் பளுவைக் குறைப்பதற்கான வழிதுறைகளை உடனே தேடவேண்டியது அவசியமெனினும் இப்போது வெளிவந்திருக்கும் விவசாயக் கடன் விடுதலைச் சட்டத்தின் தத்துவங்கள் ஞாயவிரோதமானவை என்றும், கருதும் நலங்களைப் பயக்கமாட்டாததென்றும் தீர்மானிக்கிறது.

7. நிலவரியும், சமீன்களின் மேல்வாரமும் குடிகளை நசுக்கக் கூடிய சுமையாயிருக்கின்றனவென்றும், நிரந்தரமான நன்மை கருதி அவற்றின் பெரும்பகுதியை உடனே குறைக்க வேண்டுவது அவசியமென்றும், குடிகளின் செயலுக்குத் தக்கவாறு தரவாரியாகக் குறைக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கிறது.

8. ஆட்சிப் பகுதியையும் நீதிப்பகுதியையும் வேறுபிரிக்க வேண்டுமெனும் மக்களின் கோரிக்கைப்படி அரசியலார் உடனே அவற்றைப் பிரிக்க வேண்டுமென முடிவு செய்கிறது.

9. முதலாளிகள்,தொழிலாளிகளின் ஊதியத்தை உடனே உயர்த்தி தொழிலாளிகள் வளம்பெற வாழ்தற்கான வசதி அளிக்க வேண்டுமெனவும், இப்பொருளாதாரத் திருத்தத்தை அரசியலார் உடனே செய்து முடிக்க வேண்டுமெனவும் திர்மானிக்கிறது.

10. தமிழர் சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுதற்கு ஒரு தமிழ் தினத்தாள் தொடங்குவதெனத் தீர்மானிக்கிறது.

11. பாடசாலைகளில் இந்திமொழிப் படிப்பை கட்டாயப் படுத்தச் செய்திருக்கும் முடிபினால் தமிழ்மொழிக்கும் தமிழர் நாகரிகத்திற்கும் கேடு விளைக்குமாதலாலும், மக்களின் கல்வி முன்னேற்றத்தைத் தடைசெய்யுமாதலாலும், அதனைத் தடுக்க வேண்டுமெனுஞ் செய்தியையும், மந்திரிமார் இம்முடிபு செய்தது மக்களாட்சி முறைக்கு முரண்பட்டதாகவும் கொடுங்கோன்மை யாகவும் இருக்கும் விவரங்களையும் மாட்சிமை தங்கிய கவர்னர் அவர்களைப் பேட்டிகாணப் பன்னிருவர் அடங்கிய ஒரு கழகம் அமைக்கப்பெற்றது.

இந்நிகழ்ச்சிகளுடன் மாநாடு இனிதுமுடிந்தது. தமிழ் சில்லாக்கள் ஒவ்வொன்றிலிருந்தும் பிரதிநிதிகள் திரள்திரளாக வந்து குழுமி இருந்தனர். மாநாடு நடந்த மன்றத்தில் 3000 பேர்களும், வெளியிடத்தில் 2000 பேர்களும் ஆர்வத்துடன் இருந்தனர். மணிக்கூண்டிலிருந்து அன்று காலையில் தலைவர்களை மாநாட்டிற்கு ஊர்வலமாய் அழைத்து வந்தது கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. திருச்சிராப்பள்ளி திருவாளர் K. A. P. விசுவநாதம் அவர்களின் ஊக்கமும் முயற்சியும் மாநாட்டின் சிறப்பிற்குக் காரணமாயிருந்தன. அவர்களும் அவர்களின் துணைவர்களும் புரிந்த அருந்தொண்டை நன்றியுடன் போற்றுகின்றோம்.

### கரந்தைத் தமிழ்ச் சங்கம்:—

1938 சனவரி 1-தேதி யன்று புத்தாண்டைச் சிறப்பித்தற் பொருட்டு நமது சங்கத்தின்பால் பேரன்பு வைத்து ஆயுள் உறுப்பினராயமர்ந்து தமிழ்ப் பணி புரிந்துவரும் உயர் திருவாளர் இராவ்பகதூர் A. T. பன்னீர்செல்வம் Bar-at-Law அவர்களின் சிறந்த பொதுநலத் தொண்டுகளைக் கருதி மாட்சிமிக்க அரசர்பிரான் ஜார்ஜ் VI அவர்கள் Sir எனும் பட்டத்தை அளித்தனர். தமிழ் மக்களின் முன்னேற்றத்திற்கும், தமிழ் மொழிவளர்ச்சிக்கும் பொது நல மேம்பாட்டிற்கும் இப்பெரியார் புரிந்த தொண்டுகள் மிகப்பல. நகராண்மைக் கழகத்தலைவராகவும் நாட்டாண்மைக் கழகத்தலைவராகவும், கல்விக் கழகங்களின் தலைவராகவும் சென்னை அரசியலாரின் மந்திரிசபையினராகவும் 'ஓம்மெம்பராகவும்' இருந்து கடமைகளைச் சீர்பெற நடத்தியதன்றி தமிழ்மக்களின் தகுதியறிந்து அவ்வவர்க்கேற்ற பதவிகள் அளித்து அவர்களை ஊக்கிவந்தனர். திருவையாறு, உரத்தநாடு, ராஜாமடம் என்ற ஊர்களில் நாட்டாண்மைக் கழகத்தினர் நடத்திவரும் கல்லூரிகளில் தமிழ் மாணவர்களும் இடம்பெறச் செய்து அவர்கள் மிகுதொகையினராய் உணவு, உறையுள், இலவசக் கல்வி முதலியன பெற்று நன்னிலை எய்தும் பொருட்டுப் பல்லாற்றானும் உதவிவந்தனர். திருவையாற்று அரசர் கல்லூரியில் மங்கிக்கிடந்த தமிழ்ப்பிரிவை வளம் பெறச் செய்தனர்; புலமைமிக்க தமிழாசிரியர்களைத்தேடி நியமித்தனர். ஒரு வகுப்பினர்க்கே உரியதுபோல் பாதுகாக்கப்பட்டுவந்த இக் கல்லூரியில் சாதி சமயவேற்றுமைகள் இன்றி எல்லோரும் பயில வழிதிறந்தனர். சில்லாவிலுள்ள உயர்தரப் பள்ளிகளில்

தமிழ்ப் புலமையுள்ள தமிழர்களையே தமிழாசிரியர்களாக நியமித்துவந்தனர். இன்னவாறெல்லாம் இடையறாது, இணையற்ற தமிழ்த்தொண்டு புரிந்துவரும் தலைவரின் மாட்சிக்கு இப்பட்டம் மிக மிகப் பொருத்தமானது. மன்னர்பிரான் தலைவரின் தகுதி அறிந்து இத்தகைய சிறப்பை அளித்ததுபற்றி தமிழ் கூறும் நல்லுலகம் அளப்பருங்களி சிறந்திருக்கின்றது.

2. **விரிவுரைக்கூட்டம்:—** 3—1—38உ யன்று "ஆழ்வாரும், திருவாய் மொழியும்" என்ற பொருள்பற்றி திருமாலடியார் திருப் பெருமன்றத் தலைவர், வேலூர் திரு. வே. ஆழ்வார் இராமாநுச நாயகி அம்மையார் அவர்கள் சிறந்த விரிவுரை ஆற்றினர். வைணவ நூல்வெள்ளத்தை நுணுகி ஆய்ந்து அவற்றின் சிறந்த கருத்துகள் யாவும் உளத்தே அமைந்து, ஊற்றெடுத்து, பெருவெள்ளமாய்ப் பெருகி சொற்சுவை பொருட்சுவை, செறிந்த அம்மையார் அவர்களின் பேருரை கேட்டார்ப் பிணிக்குந் தகையதாய்த் திகழ்ந்தது.

3. **வெள்ளி விழா:—** 1938 ஏப்ரல் 15, 16, 17உ களில் திருப்பாதிரிப்புலியூர், திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய தேசிகசுவாமி அவர்களின் சீரிய தலைமையில் நடைபெறுதற்கான ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. அதுபோது "கரந்தைத் தமிழ்க் கல்லூரி" எனும் பல்கலைக் கழகம் தொடங்க எண்ணியிருக்கின்றனர். வித்துவான் தேர்விற்குரிய பாடங்களைப் பயிற்றுவதோடு மாணவர்களின் தகுதிக்கேற்றபடி கவின்கலை, தொழிற்கலைகளில் ஒன்றேனும் கற்பிக்கப்பெறும். ஏறத்தாழ பள்ளியிறுதி வகுப்புவரை கல்வி பயின்ற மாணவர்கள் கல்லூரியில் சேரும் தகுதியுடையவர்கள். இத்தகைய கல்லூரியின் இன்றியமையாமை, அமைப்பு முதலிய செய்திகளைக் கீழே விவரித்திருக்கிறது. மாணவர்க்கு உணவு, உறையுள், கல்வி முதலியவற்றைத் தந்து சிறந்த முறையில் கல்லூரியை நடத்த ரூ. 5000 ஆகிலும் ஆண்டுதோறும் வேண்டியிருக்கும். தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் தத்தமாலியன்றபடி பொருளுதவி செய்து சங்கத்தை ஊக்குதல் கடன். இந்த ஆண்டில் 30 மாணவர்கள்வரை சேர்த்துக் கல்லூரி தொடங்கப்பெறும். சேர விரும்பும் மாணவர்கள் தங்கள் தகுதிகளையும், வயது, இருப்பிடம் முதலிய விவரங்களைக் குறித்து 1938 மார்ச்சு 31உ க்குள் விண்ணப்பம் அனுப்பவேண்டும்.

---

# மதிப்புரை

''பாரதிதாசன் கவிதைகள்'' எனும் பெயரிய செய்யுள் நூலை வெளியிட்ட திரு. T. S. குஞ்சம் B. A. L. T. அவர்கள் எமது பார்வைக்கு அனுப்பியதை நன்றியுடன் பாராட்டுகின்றேன். புதுவதான கொள்கைகளை இசையுடன் பயிலவும், பொருளை எளிதே உணரவும், இயற்றிய செய்யுள் நூல் காவியம், இயற்கை, காதல், தமிழ், பெண்ணுலகு, புதிய உலகம், பன்மணித்திரள், என்ற ஏழுபகுதிகள் கொண்டது. இதன் விலை அணு 8.

வாகீச விஜயம்:— திரு. சுத்தானந்த பாரதியார் இயற்றிய நாடக நூல். அப்பர் சுவாமிகளின் திருநெறித் தொண்டின் திறனைத் தமிழ்மக்கள் அனைவரும் கண்கூடாகக் கண்டு தெருட்சியடையுங் கருத்துடன் எழுதியநூல்.

தமிழ் நாட்டின் நாடக அரங்குகள் சீர்குலைந்திருக்கும் இற்றைநாளில் தூய எண்ணங்களையும் உயரிய நோக்கங்களையும் விளக்கும் நூல்கள் மிகவும் வேண்டப்படுவன. இதனைப்போற்றி தமிழ்மக்கள் நலம் பெறுவாராக. கோலாலம்பூர் தபாற்பெட்டி 14-ல் உள்ள மாசி என்பார் பதிப்பாளர். விலை 50 சதம்.

இராமலிங்க விஜயம்:— இதுவும் திரு. சுத்தானந்தபாரதிகள் இயற்றியது. சுத்தசன்மார்க்க நெறியின் தன்மைகள், திருவருட்பா விளக்கம், இராமலிங்க அடிகளின் வரலாறு உபதேசம் ஆகிய பொருள்களை விளக்கி, செவ்விய தமிழில் எழுதியநூல். தமிழன்பர்கள் போற்றுதற்குரியது. சிங்கப்பூர் அன்பு நிலையத்தினர் இத்தகைய நூல்களை வெளியிட்டு வருவது சாலவும் சிறந்த தமிழ்ப்பணி. விலை அணு 10.

## மருத்துவசாலைக்குதவிய நன்கொடை.

| | | | | |
|---|---|---|---|---|
| திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் | | 50 | 0 | 0 |
| ,, வ. க. தியாகராச பிள்ளை | ,, | 100 | 0 | 0 |
| ,, G. இலக்குமண பிள்ளை | ,, | 1 | 0 | 0 |
| ,, இராமசாமி ஐயர் | ,, | 0 | 8 | 0 |

# கரந்தைத் தமிழ்க் கல்லூரி



கரந்தைத் தமிழ்ச் சங்க ஆதரவில் தோடங்கப்பெறுவது



## இக்காலக் கல்வியின் பொதுநிலை

மக்களுக்குக் கல்வி இன்றியமையாதது என்ற கொள்கையில் அறிஞர் பலரும் ஒத்த எண்ணமுடையவர்களாக விருப்பினும், இக்காலத்து நம் நாட்டில் பரவியுள்ள கல்விமுறையில் வேறுபட்ட கருத்துடையவர்களாக விருக்கின்றனர். இக்கல்விமுறை ஒரு நூற்றாண்டுக்கு முன்பு அக்காலத்திய நிலைக்கு வேண்டிய நோக்கத்துடன் ஆங்கில அரசாங்கத்தினரால் ஏற்படுத்தப்பட்டதாகும். இது, தான் கொண்ட நோக்கத்தை எய்தியதோடமையாது, அறிவு வளர்ச்சிக்குப் பலவகையாலும் பயன்பட்டு, மக்கள் வாழ்க்கையில் ஒரு புதிய கிளர்ச்சியை உண்டுபண்ணியதெனினும், நம் நாட்டில் பண்டுதொட்டு நிலவிவந்த கல்வி முறையை அறவே ஒழித்துவிட்டது. பின்னும், இக்கல்விமுறை மேல்நாட்டுக் கலைமுறையையே பின்பற்றியதாலும், அரசாங்க அலுவல்களை எதிர்பார்த்தே பெரிதும் கற்கப்படுவதாலும், நம் நாட்டு நாகரீகத்தின் தனிப்பண்புகள் வளர்வதற்கும், கல்வியின் பயன் எல்லா மக்களிடத்தும் பரவுதற்கும் ஏற்றதுணைபுரிய இயலாதாயிற்று.

## தமிழ்க் கல்வி

இந்நிலையில், நாட்டுப் பற்றுள்ள நன்மக்கள் சிலரால் தனித்தமிழ்க் கல்லூரி வாயிலாகவும், பல்கலைக் கழகங்கள் வாயிலாகவும் தமிழ்ப் பயிற்சிக்கென சிறிது வழி வகுக்கப்பட்டது. இவ்வழியால் எய்தும் பயன் இளைஞர் உள்ளத்தைக் கவர்தற் கேற்ற வளம் அமையப் பெறாததால் செல்வோர் மிகச் சிலராயினர். புதுவதாக வகுக்கப்பெற்ற தமிழ்க் கல்வி முறையும், இலக்கியப் பயிற்சி ஒன்றோடு நின்று, வேறு அறிவுத் துறைகளிலும், தொழிற் றுறைகளிலும் மாணவர்களைப் பயிற்ற மேற்கொள்ளாமையின், பயின்றோர் பலரும் பள்ளிக்கூடத் தமிழாசிரியராகவே அமர்ந்து காலங் கழிக்க வேண்டியவராயினர். இக்காலத்து, தமிழாசிரியர்களுக்குள்ள பொருள்வருவாயும், நாட்டின் நன்குமதிப்பும் அனைவரும் நன்குணர்ந்ததேயாகும். 'தமிழைப் பயின்றோமே' என மனமழுங்குவாரும் உளர். ஆங்கில முறையிற் பயின்றோர் பலரும், தமிழின் உயர்வு காணக் கிடைக்காமையின், மொழியிடத்து விருப்பில்லாததோடு ஒருவகையான வெறுப்புமுடையவராயிருப்பாராயினர். எனவே, உண்மைத் தமிழன்பும், பயிற்சியும் ஏதோ சிலசில இடங்களிற்றான் அருமையாகக் காணப்படுவதாகின்றது.

## கற்றோர் நிலை

அரசாங்கப் பணியையும், ஆசிரியர் வேலையையும் நோக்கமாக வைத்துக் கற்ற ஆங்கிலக் கல்வியும், தமிழ்ப் பயிற்சியும், அவை கிடைக்கப் பெறாத காலத்துப் பெரிதும் முறுமுறுத்துக் 'கல்லாதார் அல்லலினும் கற்றோர் அல்லலே பெரிதாயிற்று' என்று கூறக்கூடிய நிலைக்கு வந்து விட்டன. இவ்வல்லலுக்குக் காரணம், கல்வியின் இலக்கும், கற்ற முறையும், நாட்டு நிலைமைக்கும் காலநிலைமைக்கும் ஒவ்வா திருப்பதே என்பதை நம்மவர் இப்போது நன்குணர்ந்து வருகின்றனர். ஆங்கில முறையிற் கற்றோர், தமிழ்ப் பண்பு, நாகரீகம், உள்ளப்போக்கு முதலியவற்றையெல்லாம் உண்மையாக உணரமாட்டாது, தம்மோடு ஒரு நாட்டிலேயே பிறந்து உடனுறையும் மக்களிடையே வேற்றுநாட்டார்போல், நலம், தீங்கு ஒன்றிலும் ஈடுபடாது வாழ்ந்துவருகின்றனர். தமிழ்ப் பயிற்சி யொன்றையே மேற்கொண்டோர் காலப் போக்குக்கேற்ற பிற பயிற்சி பெறுமையின் 'கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே முற்றோன்றி மூத்தகுடி' மக்களாக இன்றும் விளங்குகின்றனர்.

## கல்வியின் கூட்டுறவும் நாகரீக வெள்ளமும்

பெரிய நாகரீகங்களும், இலக்கியங்களும் ஒன்றோடொன்று நெருங்க நேருங் காலத்தில், ஒன்றின் நன்மையாய பண்புகளை மற்றொன்று பெறுவதும், இவற்றின் கூட்டத்தாலாய நன்மை உலகமுன்னேற்றம் என்னும் பொதுநிதியை வளம்பெறச் செய்வதும் விதியாகவிருக்க, நமது நாட்டிலேற்பட்ட மேல்நாட்டுத் தொடர்பால் நம் மக்களே ஒருவரினின்று ஒருவர் காலத்தாலும் இடத்தாலும் சேயராயினர்போல் பிரிந்துதோன்றுதல் வியப்பினும் வியப்பே. இனியாவது, இப் பரந்தவுலகில் நம் தொன்மொழியும், நாகரீகமும், தனித்திராமலும், தன் தனிநிலையை இழந்துவிடாமலும், விளங்க வேண்டுமாயின் பிறநாட்டு இலக்கியங்களையும், கலைகளையும் நம் மொழியிலாக்கியும், நம் இலக்கியங்களையும் கலைகளையும் உலகறியச் செய்தும், பரந்த உலகத்தோடு ஒட்ட ஒழுகிப் புதிய அறிவுநூல்களையும், கலைகளையும், இலக்கியங்களையும் நம் நாட்டுத் தனியறிவால் தோற்றுவித்தும், நம் நாடும் பேருலகமும் நலமடையச் செய்யவேண்டுவது நம் மக்களின் முதற்கடமையாகும்.

இம் முயற்சியில் நாம் சிறிது உறங்கினும் சேயதெல்லாம் நணியதாகச் சேர்த்துவரும் இக்காலைய நாகரீக வெள்ளம், நம் தனிநிலையை ஈர்த்துக் கண்காணுவண்ணம் கர்லக் கடலில் ஆழ்த்திவிடும் என்பதை அறிஞர் மனங் கொண்டு ஆவன புரிதல் வேண்டும்.

## கல்வி வகை

பலவாக விரிந்து காணும் கல்விவகைகளைக் காண்போமாயின், அவை, மக்கள் உள்ளத்தைச் செம்மைப் படுத்துவனவான அகக்கல்வியும், புறம்பான உலகம், இயற்கை முதலியவற்றின் உண்மைகளைக் காணுதலும், கண்டவுண்மைகளை உலகத்திற்குப் பயன்படும் வகையில் தொழிற்படுத்துவதுமான புறக் கல்வியுமென இருபெரும் பிரிவுகளு ளடங்கும். உயிரும் உடலும்போல் இரண்டும் இன்றியமையாதனவே யாகும். எண்ணும் எழுத்துமாய அடிப்படையான கல்வி கற்ற பின்னர் அவரவர்கள் தகுதிக்கேற்ற துறையில் செல்வதே நலமாகும். கல்லூரிகளும் ஓரளவுக்குமேல் கல்விவகைக் கேற்பத் தனித்தனியமைந்திருத்தலே நலமாகும். சிறப்பாகப் பயிலுங்கால் எவ்வகைக் கல்வியையும் ஓரிடத்திலேயே பயிற்றல் என்பதும், ஒருவரே பயின்றுவிடுதலென்பதும் துறை போவனவல்ல. அகக்கல்வியே மக்கட் பண்பை வளம்படச் செய்வதாகும். இலக்கியம், தத்துவம், வரலாறு முதலியன இதன்பாற் படுவனவாகும். நம் சங்கம் இப்பொழுது தொடங்க விருக்கும் கல்லூரியும் இப்பகுதியைச் சார்ந்ததேயாகும்.

## நமது கல்லூரி

நமது சங்கம் நிறுவ எண்ணும் தமிழ்க் கல்லூரி தமிழின் தனிநிலையைக் காத்து, உலகத்தின் உயரிய நூல்களையும் கலைகளையும் தமிழ்மொழி வழியாகவே நம் நாட்டில் பரப்பி மக்கட்டன்மையை வளம்படுத்துவதற்கென அமைவதொன்றாகும். இக் கல்லூரியில் வித்துவான் வகுப்பு பாடதிட்டத்திற்கேற்பத் தமிழ் மொழியும், அடிப்படையான அறிவு நூல்களும், பயன்படுத்தக் கூடிய ஓரளவுக்குப் பிறமொழியும் கற்பிக்கப்படும். அறிவுநூல்களின் அடிப்படையான பகுதிகளைத் தமிழிலேயே கற்பிக்கப் படுவதோடு அந் நூல்களின் கருத்தை எளிதில் நம் மக்கள் அறிந்து கொள்வதற்கேற்ற முயற்சியும் செய்யப்பெறும். பிறநாட்டு மொழிகளிலுள்ள உயர்ந்த இலக்கியங்களெல்லாம் தமிழில் ஆக்கிக்கொள்ளும் வகை முயலுவதும் இதன் நோக்கமாகும். இதிற் பயிலும் மாணவர்கள் தங்கள் வாழ்க்கையை இனிது நடத்தித் தாம்பெற்ற கல்வியின் பயனை நாட்டில் பரவச்செய்வதற்கு ஏற்றதாக மருத்துவம், ஓவியம், சிற்பம் முதலிய கலைகளில் ஒன்றும், உழவு, நெசவு முதலிய கைத்தொழில்களில் ஒன்றும் பயில்வார்கள்.

## மாணவர் கடன்

இவ்வுயரிய நோக்கத்தோடு தோன்றும் கல்லூரியின் மாணவர்கள் தங்கள் வாழ்க்கையை நாட்டின் நலத்திற்காகவே உரிமையாக்க வேண்டியவர்களாகலின் கல்வி பயிலுங்கால் அவர்களுக்கான உண்டியும் உறையுளும் உதவல் கல்லூரியின் கடமையாகின்றது. இவர்கள் வித்துவான் வகுப்புப் பாடம் முடிந்தபின் இரண்டு ஆண்டுகளாவது கல்லூரி ஆசிரியர் ஒருவர் மேற்பார்வையில் ஆண்டுக்கு நாலு திங்களாவது நம் நாட்டின் பலபகுதிகளி

லுள்ள சிற்றூருக்குச் சென்று தாங்கள் பயில்வதோடு பிறரிடையும் கல்வி பரவச்செய்யும் பணியில் பழகுவார்கள். மாணவர்நிலை முடிந்த பின்பு தாங்கள் பயின்ற தொழில் ஒன்றை மேற்கொண்டு சிற்றூர்களில் சென்று தங்கி தமிழ்மொழி, பொது அறிவு முதலிய வளங்களை நிரப்பி மக்கள் உள்ளத்தைச் செம்மைப்படுத்தும் தொண்டில் ஈடுபட்டு ஏனையோருக்கு எவ்வகையிலும் எடுத்துக்காட்டாகத் திகழ்வார்கள்.

## வேண்டுகோள்

தமிழன்பர்கள் சிறிது சிந்திப்பார்களாயினும் நாம் குறிப்பிடும் கல்லூரியின் இன்றியமையாமையும் பயனும் புலப்படாமல் போகா. இத்தகைய கல்லூரி ஒன்றை நிறுவி நடத்துவதற்குத் தொடக்கத்தில் பதினாயிரம் ரூபாவும் முதல் ஐந்தாண்டுகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாவும் அதற்குமேல் ஆண்டு ஒன்றுக்கு ஐயாயிரம் ரூபாவும் வேண்டியதாகும். இத்தொகையை யாம் எளிதில் பெறுமாறு தமிழ் மக்கள் அனைவரும் உதவ வேண்டுகின்றோம். தமிழன்பர்கள் உளங்கொள்வார்களாகின் இது மிகஎளிதில் கைகூடும். அன்போடு உதவும் எவ்வளவு சிறிய தொகையும் ஈவோரன்பினால் பெருகி முழுப் பயனையும் விளைவிக்கும் என்ற துணிபோடு உங்கள் ஒவ்வொருவரையும் இயன்றது உதவவேண்டுகின்றோம். தாங்கள் ஒவ்வொருவரும் இக்கல்லூரியை நிறுவலும், நிலைநிறுத்தலும் தங்கள் தனிக் கடமையாக எண்ணி முழுமனதோடும் முயன்றால் இது அண்மையில் கைகூடி நிலைத்துநின்று பயன்தரல் ஒருதலை என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## முதற் கடன்

இவ்வுலகில் தோன்றும் ஒவ்வொருவரும் நம்முன்னோர்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக சேமித்து வைத்த பெருநிதிக் குவியல்களுக்கு உரியவர்களாகின்றோம். இந்நிதிக் குவியல்களைப் பாதுகாத்தும் பெருக்கியும் நம் பின் தோன்றுவாரிடம் சேர்ப்பிக்கும் கடமை பூண்டுள்ளோம். இக்கடமையில் சிறிது வழுவுவோமாயினும் நம் புகழ் கெடுவதோடு பழிக்கும் உரியவராவோம். வழிவழியாகப் பெருகிவரவேண்டிய ஒரு பொதுநிதி நம்பங்கிற்கு வந்த காலத்து அதைப் போற்றுதலும் பெருக்கலும் செய்யாவிடின் நாம் மக்கட் பகுதியிற் சார்ந்தவர், ஆவோமா? நம்மோடொத்த பிறமக்கள் செயலைக் கூர்ந்துபாருங்கள்! பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்துவந்ததும் எவ்வகையானும் தனக்கு ஒத்ததும் உயர்ந்ததுமில்லாததாகிய தமிழ்மொழியையும் பண்பையும் உடைமையாகப்பெற்ற நீங்கள் பழையது போற்றிப் புதியது புனைந்து இனிவரும் பின்றோன்றல்களுக்கு உரிமையாக்குதல் முதற்கடன் என்பதை உளங்கொண்டு ஆவனசெய்ய முந்துங்கள்.

த. வே. உமாமகேசுவரன்,
சங்கத்தலைவர்.